உ

கடவுள் துணை.

# சீமந்தனி



மதுரை ஜில்லா செம்பூர்

வீ. ஆறுமுகஞ் சேர்வை அவர்களால்

எழுதப்பெற்று



சென்னை

ஆனந்தபோதினிப் பத்திராதிபர்

நா. முனிசாமி முதலியா ரவர்களால்

வெளியிடப்பெற்றது

1927

[ரிஜிஸ்டரானது]                [விலை அணு 8.

# பொருளடக்கம்.

# முன்னுரை

சீமந்தனி யென்பாள் அற்புதம்வாய்ந்த கற்பினையுடையாள் : தெய்வபக்தியிற் சிறந்தவள் : உலகைவிட்டு நீங்கிய தன் கணவனுயிரைத் திரும்பவும் பெற்ற சாவித்திரிபோல, யமுனை வெள்ளத்தில் வீழ்ந்து மறைந்த தன் கணவனை, தெய்வபக்தியால் மீண்டும் அடைந்தவள். இவளுடைய சரிதையானது, சோமவார விரதத்தின் மகிமையையும், தெய்வபக்தியின் உயர்வையும், பதிவிரதைகளின் இலக்ஷணங்களையும், பெற்றோர் பிள்ளைகட்குச் செய்யவேண்டிய கடமைகளையும், தெய்வபக்தி யுடையாரிடத்தில் அன்பு செலுத்துவோர் அடையும் நன்மைகளையும், வஞ்சனைசெய்வோர் எய்தும் துன்பங்களையும், நட்பின் தன்மையையும், இராஜரீக முறைமைகளையும், தான தர்மங்களின் உயர்வையும், பிற தர்மங்களையும், நீதிகளையும் நன்கு விளக்கக்கூடியது இதன் உயர்வுநோக்கி இதனைப் பலரும் படிக்கவும் கேட்கவும் விரும்புகின்றனர். சில நாடகக்காரர்களும் இச்சரிதையை நாடக மேடைகளில் நடித்துக்காட்டி வருகின்றனர். இக்கதை இங்ஙனம் பலரும் கொண்டாடத் தக்கதாயிருந்தும், தமிழில் பிரமோத்தர காண்டம், உபதேசகாண்டம் முதலிய நூல்களில் செய்யுள் ரூபமாகச் சுருக்கிக் கூறப்பட்டிருத்தலின், தமிழ்நாட்டினர் இதனைத் தெளிவாகப் படித்துணருதற்கு இடர்ப்பாடுறுகின்றனர். இக்குறையை நீக்குதற்குத் தமிழ்நடையில் சீமந்தனி கதையொன்றை விரிவாக எழுதி வெளியிடின் அது, தமிழுலகிற்கு மிகுதியும் பயன்படுமென்னும் ஓர் எண்ணம் எனக்குதித்தது. அதனால், நான் பிரமோத்தர காண்டத்திலுள்ள சோமவார விரதமான

மியம், சீமந்தனி பாவனை என்னும் இரண்டு அத்தியாயங் களையும் தழுவி இந்நூலைச் செந்தமிழ் நடையில் எழுதி முடித்தேன்.

இதஃதங்ஙனம் என்னால் எழுதப் பெற்றிருப்பினும், இக்கால வியலுக்குத் தக்கபடி இதில் தள்ளத் தக்கன தள் ளப்பட்டும், கொள்ளத்தக்கன கொள்ளப்பட்டும், சுருக்கத் தக்கன சுருக்கப்பட்டும், விரிக்கத்தக்கன விரிக்கப்பட்டும், நூதனமாகச் சேர்க்கத்தக்கன சேர்க்கப்பட்டு மிருக்கின் றன. நீதிகளை விளக்கத்தக்க பற்பல செய்யுட்கள் பண் டைய நூல்களிலிருந்து எடுத்துச் சேர்க்கப்பட்டும், சிற்சில செய்யுட்கள் என்னால் எழுதிச் சேர்க்கப்பட்டுமிருக்கின் றன. பண்டைய நூல்களின் கவிகள் கொட்டேஷன் என் னும் குறியுள்ளனவாயிருக்கும், என்னுடைய செய்யுட்கள் அஃதில்லாமலிருக்கும். இப் புண்ணிய சரிதை, இங்ஙனம் பல உதாரணச் செய்யுட்களோடு எவர்க்கும் விளங்கத்தக்க தெளிவான தமிழ் நடையில் விரிவாக எழுதப்பட்டிருத்த லின், பொதுவாகத் தமிழ்மக்கள் எல்லோருக்கும், சிறப் பாகக் கல்விகற்கும் மாணவர்க்கும், மாணவிகட்கும் பெரி தும் பயன்படும். ஆதலின், தமிழ்நாடு இதனை ஆதரிக்கு மென்று நான் துணிகின்றேன். இதில் குற்றங்கள் காணப் படின், அறிந்தோர் அவற்றை எனக்கறிவிப்பின் நான் வந்தனத்துடன் ஏற்று இதன் மறுபதிப்பில் திருத்திக் கொள்வேன்.

இங்ஙனம்,

வீ. ஆறுமுகன்.

கடவுள் துணை

# சீமந்தனி

## அத்தியாயம்—1

### சீமந்தனியின் உற்பத்தி

தரும பூமியாகிய இப் பரத கண்டத்தில், பண்டைக் காலத்து இந்திய மன்னர்கள் அரசாண்டு வந்த பற்பல நாடுகளில், '**ஆரியாவர்த்தம்**' என்னும் நாடானது மிகச் சிறப்புற்றது; செழித்த சோலைகளால் சூழப்பட்டது; நிலவளமும் நீர்வளமும் அமையப் பெற்றது; சிறந்த தேவாலயங்களை யுடையது; செல்வத்திற் சிறந்த குடிஜனங்களை யுடையது; மாதம் மும்மாரி பெய்யத் தக்க புண்ணியம் பொருந்தியது; நாடோறும் நன்மையே வளர்ந்தோங்குவது; எவ்வகைக் குறைவு மில்லாதது; செல்வத்தாலும் அலங்காரத்தாலும் குபேர நாட்டையும், அமரர் நாட்டையும் நிகர்ப்பது.

இத்தகைச் சிறப்புடைய இத் தேசத்தை முன்னொரு காலத்தில், '**சித்திரவருமன்**' என்னும் அரசன் ஆட்சி புரிந்து வந்தான். இவன், எவ்வகைச் சிறப்புடையவனெனில், இரத்தின கிரீடங்களை அணிந்த பற்பல அரசர்களுக்கு அரசனானவன்; மிக்க கல்வித்தேர்ச்சி யுடையவன்; அஷ்ட திக்குகளிலும் பரவிய கீர்த்தி யுடையவன்; மற்ற அரசர்களுக் கெல்லாம் மகுடம் போன்றவன்; பகைவரை வென்ற வேலாயுதத்தை யுடையவன்; குடிகளிடத்தே

அன்பும் அருளும் ஒருங்கே அமையப்பெற்றவன்; ஆறிலொரு கடமை வாங்கும் மகா புண்ணிய புருஷன்; தெய்வ பக்தி யுடையவன்; குருவிசுவாசம் மிக்கவன்; பெரியோர்களிடத்து மரியாதையுடன் நடந்து கொள்ளத் தக்கவன்; தான தருமங்களிற் சிறந்த தார்வேந்தன்; அளவில்லாத யாகங்களைச் செய்தவன்; சகல உயிர்களுக்குந் தாய்போன்றவன்; மரகத மலைபோல விளங்கும் ஸ்ரீ விஷ்ணுமூர்த்தியின் திருவடிகளையும், திரிபுரங்களை யெரித்த பெருவில்லியாகிய பரமசிவனுடைய உபய பாதங்களையும் இரவும் பகலும் விசேஷமாகத் துதிசெய்யக் கூடியவன்.

இவன், முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட வெண்கொற்றக் குடையின் நிழலிற் றங்கிச் சகலருங் கொண்டாடும்படி மனுநீதி வழுவாது செங்கோல் செலுத்தி வருங்காலத்தில் வேய்ங் குழலின் நாதத்தைப் போன்ற இனிய வசனத்தையுடைய மகா உத்தமிகளாகிய சில மனைவியரை மணந்துகொண் டிருந்தான். அவர்களிடத்தே அவனுக்கு இளமையான இடபம் போன்ற சிறப்பும் வனப்புமுடைய சில புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களை அவன் மிக்க அன்புடன் வளர்த்து வந்தான். அங்ஙனம் அவனுக்குச் சில புத்திரர்கள் பிறந்திருந்தும், பெண் குழந்தை யொன்றில்லையே என்ற கவலையானது அவன் மனத்தை வருத்திக்கொண்டிருந்தது. அதனால் அவன், "நமக்குப் புத்திரபாக்கியத்தை அளித்த கடவுள், சில புத்திரிகளையும் அளிக்காமற் போயினார்; ஒரு குடும்பத்திற்குச் சுற்றத்தார்களை விருத்தி செய்வது பெண்களே யாவர்; பல பெண்கள் இருந்தால் பல குடும்பத்தார்கள் சம்பந்திகளாக ஏற்படுவார்கள்; அதனால் சுற்றச் சேர்க்கை அதிகமாக உண்டாகும்; மேலும் அக்குடும்பத்திற்குப் பல மருகர்கள் ஏற்பட்டுச் சந்தோஷத்தை உண்டாக்குவார்கள்; அப்படி யிருக்க நமக்கு ஒரு புத்திரி

யேனும் இல்லாமற் போனது பெருங் குறையே'' என்று சிந்தித்து, ஒரு நல்ல குமாரத்தியைப் பெற விரும்பித் தெய்வங்களை வேண்டிப் பற்பல நற்றவங்களைச் செய்து கொண்டு வந்தான். கடவுள் தம்முடைய உண்மைப் பக்தர்களின் விருப்பத்தை நிறைவேற்றி வைக்காமலிருப்பாரோ? அந்தச் சித்திரவருமனுடைய தவத்தின் பயனாக ஒரு சமயத்தில், அவன் மனைவியருள் ஒருத்தி, நல்ல சுபமுகூர்த்தத்தில் செந்தாமரைப் புஷ்பத்தில் வீற்றிருக்கும் மகாலட்சுமியைப் போன்ற ஒரு புத்திரியைப் பெற்றாள்.

அங்ஙனம் உத்தம லக்ஷணங்களை யுடைய புத்திரி பிறந்தவுடனே, சித்திரவருமன் உமாதேவியாரைத் தனக்குப் புதல்வியாகப் பெற்ற மலையரசனைப் போல மகிழ்ச்சியுடைந்தான். அம் மகிழ்ச்சியால், ஆங்கு வந்தவர்களுக்கெல்லாம் சர்க்கரையும், வாழைப் பழமும் வழங்கினான்; யாசகர்க்கு விருப்பந் திருமட்டுந் திரவியங்களைக் கொடுத்தான்; ஏழைகளுக்குப் பொற் காசுகளை வாரி யிறைத்தான்; அந்தணர்க்கு வேண்டுவன நல்கினான்; வித்வான்களுக்கு வேண்டிய சன்மானங்கள் செய்தான்; தேவாலயங்களிற் சிறப்புச் செய்தான்; நகர மாந்தரை எங்கும் அலங்கரித்து உற்சவங் கொண்டாடச் செய்தான்; இவ்வாறு அவன், புத்திரி பிறந்த மகிழ்ச்சியால் இத்தகைய சிறப்புக்களை யெல்லாம் செய்து, சுப தினங்களிலே அக் குழந்தைக்குப் பாலூட்டல், தொட்டி லேற்றல் முதலிய சடங்குகளை யெல்லாம் செய்வித்து, சீமந்தனி எனத் திருநாமமுஞ் சூட்டினான்.

அவ்வாறு அப் புதல்விக்கு நாமகரணம் முதலிய சிறப்புக்களெல்லாம் செய்த பின்பு, அம் மன்னன், அப் பெண்ணிற்குச் சாதகங் கணித்து, அதன் பயனை ஆராயக் கருதி, உடனே, தன் நகரத்திலுள்ள சோதிட சாஸ்திரிகளுள்

சிறந்தவர்களை அழைத்து வருமாறு ஏவலாளர்களுக்குக் கட்டளை யிட்டான். அவர்களால் அப்பொழுதே அச் சோதிடர்கள் வரவழைக்கப் பட்டார்கள். அரசன் அங்ஙனம் வந்த சோதிட சாஸ்திரிகளை நோக்கி, "பற்பல கணித சாஸ்திரங்களையு முணர்ந்த விற்பனர்களே! நான் அருமையாகப் பெற்றிருக்கின்ற சீமந்தனி என்னும் பெண்ணிற்குச் சோதிட சாஸ்திர முறைப்படி சாதகங் கணித்து அதன் பயனைக் கூறுவீராக" என்று சொன்னான். அங்கு வந்திருந்த சோதிடர்களுள் ஒருவன், அந்தப் பெண் பிறந்த நேரம் முதலியவற்றை ஆராய்ந்து சாதகம் எழுதி, அவளுக் கேற்பட்டிருந்த பலாபலன்களைத் தெரிந்து சொல்லத் தொடங்கி மன்னன் முகத்தை நோக்கி, "அரசர் பெருமானே! உம்முடைய புதல்வி, கலியாணத்தில் உமாதேவிக்கு நிகரான சிறப்படையத் தக்கவள்; புத்திரர்களைப் பெறுவதில் அதிதிக்கு நிகரானவள்; அழகில் தமயந்தி யென்று சொல்லத் தக்கவள்; நற்குணத்தில் திருமகள் போன்றவள்; கற்பில் சீதாதேவிக்குச் சமமானவள்; கல்வியில் கலைமகளுக்கு நேரானவள்; இவள் நல்ல கணவனை அடைந்து அவனுடன் அகமகிழ்ச்சியோடு அநேகம் வருஷங்கள் வாழ்ந்திருப்பாள்; இந்த உத்தமியால் உம்முடைய குலம் மேன்மை யடையும்; இவளுடைய புகழானது உலக முள்ள வரையிலும் நிலைத்து நிற்கும்; இவளுக்கு நிகரான பெண்கள் இப் பூமியில் வேறெவரு மில்லை; இத்தகைய பெண்ணைப் பெற்ற உம்முடைய புண்ணியமே சிறந்ததாகும்" என்று கூறினான். அரசன் அளவற்ற மகிழ்ச்சி யடைந்து அச் சோதிடனுக்கு உயர்ந்த ஆடையாபரணங்களையும், மிகுந்த பொன்களையும் கொடுத்து அவனைக் கொண்டாடினான்.

இந்தச் சோதிடன், அந்தப் பெண்ணின் சாதகத்தை ஆராய்ந்து கூறிய பலன்களெல்லாம் உண்மையே. எனி

னும், அவள் மணம்புரியும் கணவனைப் பதினைன்காவது வய தில் இழந்து மீண்டும் பெறக்கூடிய பலன் ஏற்பட்டிருந்தது. அதை இச்சோதிடன் தவற விட்டுவிட்டான். அதனால், மற்றொரு கணித சாஸ்திரி அந்தச் சாதகத்தை நன்றாக ஆராய்ந்து பார்த்து அப்பலனை உணர்ந்து, அம்மன்னனைப் பார்த்து, "அரசர் பெருமானே! இச்சோதிடர் கூறிய சாதகப்பலன்கள் சரியானவையல்ல; இந்தச் சாதகம் அமைந்திருக்கும் நிலைமையால் உமது புத்திரி, பதினைன்கா வது வயதில் மாங்கலிய மிழப்பாள்" என்று கூறினான். பின்னால் அவள் நாயகனை மீண்டும் அடையக்கூடிய பலன் ஏற்பட்டிருந்தும், இந்தச்சோதிடன், முந்தின கணிதக்கார னுடைய தவறுதலைக் கண்டுபிடித்து விட்டோம் என்னும் சந்தோஷத்தால், அவசரப்பட்டுப் பின்வரும் பலனை ஆரா யாது இவ்வாறு இதைமாத்திரம் கூறிவிட்டான். இதைக் கேட்டவுடன் சித்திரவருமன், கிடைத்தற்கரிய பொருளைப் பெற்றிழந்தவன் போன்றும், இடியிடைப்பட்ட நாகம் போன்றும் சோர்ந்து, சோகத்தினால் பெருமூச்சு விட்டுக் கொண்டு ஆசனத்தின்மேற் சாய்ந்து இரண்டு நாழிகை வரையிலும் மயங்கி மௌனமுற்றிருந்து, பின் தெளி வடைந்து, "அந்தோ! நான் அருமையாகிய புத்திரியைப் பெற்றும், அவள் பூரணமான மகிழ்ச்சியடைவதைப் பார்க் கப்பெறாத பாவியாய்விட்டேன்; என் தவத்தை விரும்பி எனக்குப் புத்திரியை அளித்த கடவுளுக்கு, அவளைச் சுமங் கலியாயிருக்கச்செய்ய மனமில்லாமற் போய்விட்டது; இத் தகைய புதல்வியை, அவர் நமக்குக் கொடுத்ததைக் காட்டி னும் கொடுக்காம லிருந்திருப்பாரே யானால், அஃதெவ் வளவோ நன்மையாயிருக்கும்; தெய்வமே! இளமைப் பருவத்திலேயே கணவனையிழந்து கைம்பெண்ணா யிருந்து, சாகும்வரையில் சதா சர்வகாலமும் துக்கசாகரத்திலேயே

மூழ்கிவருந்தும் என் அருமைப் புதல்வியின் பரிதாபமான நிலைமையை நான் எவ்வாறு பார்த்துச் சகித்துக்கொண்டிருப்பேன் ; என்னுடைய வாழ்நாட்களெல்லாம் துக்கமயமாகவே கழியுமே ; இதற்கோ நான் ஜன்மமெடுத்தேன் " என்று எண்ணுது மெண்ணி மனம் புண்ணுகி, முடிவில், விதியைநினைத்து, "உள்ளவர் தெள்ளியராயினும் ஊழ்வினை மெல்ல நுழைந்திடும் ; இது பழவினையால் நேர்ந்ததாகும் ; ஊழ்வினையைக்கடக்க எவரால்இயலும்; நடக்கவேண்டியது நடந்தேதீரும் ; சோதிடர் கூறியது எவ்வாறு நடைபெறுகிற தென்பதை நாம் காணவேண்டும்" என்று ஒருவாறு மனந்தேறிச் சோதிடர்களை அனுப்பிவிட்டு இராஜ காரியங்களை நடத்திவந்தான். அந்தப்புரத்திலுள்ள இராஜஸ்திரீகளும் இச்செய்தியை உணர்ந்து கவலையடைந் திருந்தார்கள். சீமந்தனி, தோழிமார்களால் செல்வமாக வளர்க்கப் பட்டு வந்தாள்.

---

## அத்தியாயம்—2

### சீமந்தனி, தன் துக்கநிவிர்த்திக்கு மார்க்கந்தேடிக் கொள்ளுதலும், அவளுடைய திருமணமும்

சீமந்தனி அங்ஙனம் வளர்ந்துவருங் காலத்தில் பேதை, பெதும்பைப் பருவங்களைக் கடந்து மங்கைப்பருவத்தை அடைந்தாள். எவரும் வியக்கத்தக்க அழகானது அவளிடத்தே வந்து குடிபுகுந்தது. அவ்வாறு மங்கைப் பருவத்தை அடைந்த அவள், தன் தோழிகளுடன் கூடிச் சோலைக்குச்சென்று மலர்கொய்து விளையாடியும், கன்னிகா மாடத்திலிருந்து பந்தாடல், அம்மானையாடல் முதலிய விளையாட்டுக்களைச் செய்தும், நீதிநூற்களைப் படித்தும்

சந்தோஷமாகக் காலங்கழித்துவந்தாள். அவள் அவ்வாறு, தன்வயதின் கிரமத்திற்குத் தக்கபடி களிப்புடன் பொழுது போக்கிவந்தும், அவளுடைய தாய்தந்தையரும், தோழிகளும் அவளின் பருவத்தையும், உருவத்தையும், விளையாட்டுக்களையும் கண்டு மகிழாமல், சோதிடர் சொன்னபடி அவளுக்குப் பின்னால் நேரவிருக்கும் துக்ககரமான சம்பவத்தை நினைத்து நினைத்து அவளைக்காணும்போதெல்லாம், "அந்தோ! இத்தகைய சிறப்புடைய பெண்மணிக்கும் இக்கதி நேரலாகுமோ? இவளுடைய பருவமும் அழகும் வீணாகப் போகின்றனவே" என்று பெருமூச்சு விட்டுத் துக்கித்துக்கொண் டிருந்தார்கள்.

இப்படி அவர்கள் முகவாட்டமடைந்திருப்பதை, சீமந்தனி ஆரம்பத்தில் தெரிந்துகொள்ளாவிடினும், தான் களிப்புடன் விளையாடும்போதெல்லாம் அவர்கள் புன்சிரிப்புக் காட்டாமலிருந்து வந்ததை உத்தேசித்துச் சில தினங்கள் சென்றபின், கவனிக்கத் தொடங்கி, "நாம் இந்த மங்கைப் பருவத்தில் எவ்வளவோ ஆனந்தத்துடன் விளையாடிவந்தும் அருமையாக நம்மைப் பெற்ற தாய்தந்தையரும், சுற்றத்தாரும், தோழிமார்களும் நம்விளையாட்டுக்களைக் கண்டு மகிழாமல் முகவாட்டத்துட னிருப்பதற்குக் காரணமென்ன? நாம் பிறந்ததில் அவர்களுக்குத் திருப்தியில்லையா? அல்லது நம்முடைய நடக்கைகள் தாம் அவர்களுக்குப் பிடிக்கவில்லையோ? அப்படி நம்மிடத்தில் எவ்வகைத் துர்க்குணங்களுமிருப்பதாகத் தெரியவில்லையே; அவர்கள் இப்படியிருப்பதன் காரணத்தை நாம் விரைவில் விசாரித்துணரவேண்டும்" என்று முடிவு செய்துகொண்டு, ஒருதினம் சில தோழிகளுடன் ஓரிடத்தில் விளையாடிக்கொண் டிருக்கும்போது அவர்களை நோக்கி, "என் ஆருயிர்த் துணைவிகளே! நான் பருவமடைந்து குதுகலத்துடன் இருந்துவரும் இக்காலத்

தில், என்னைக்கண்டு மகிழவேண்டிய நீங்க ளெல்லோரும் துக்கத்தையே அடைந்து வருகின்றீர்கள் ; உங்கள் முகத்தில் ஒருநாளேனும் சந்தோஷக் குறியை நான் பார்த்ததேயில்லை ; என் தந்தையும் தாயுமோ மிகுந்த துக்கத்தில் மூழ்கியிருப்பவர்களைப் போன்று காணப் படுகின்றார்கள் ; நான் இந்த அரண்மனையில் இவ்வாறு துக்கமுற்று முகம் வாடியிருக்கும் உங்களுக் கிடையில், முகங்கருகிய தாமரைப் புஷ்பங்களின் மத்தியிலிருக்கும் இலக்குமிபோன் றிருக்கின்றேன் ; என்னால் உங்களுக்கு நேர்ந்ததென்ன ?'' என்று வினவினாள். அதற்குத் தோழிகள் உள்ளதைச் சொன்னால் அவள் மனம் வருந்துவாளென்று கருதி, 'ஒன்றுமில்லையம்மா !' என்று வேறு சில காரணங்களைக்கூறி மறைத்தார்கள். சீமந்தனி மிக்க புத்திநுட்ப முடையவ ளாதலின், அவர்கள், உள்ள காரணத்தை மறைக்கின்றார்க ளென்பதைத் தெரிந்துகொண்டு அவர்களிடத்தில், "தோழிகளே! நீங்கள் உண்மையை மறைக்கின்றீர்கள் ; உள்ளதை உள்ளபடி கூறுவிடின், நான் உணவுண்ணேன்; உங்களுடன் ஒரு வார்த்தையு மாடேன்'' என்று துக்கித்தாள். அதன் மேலும் அவர்களால் அவ்விஷயத்தைக் கூறுதிருக்க முடியவில்லை. அதனால் அவர்கள், 'சீமந்தனி, பதினான்காம் வயதில் மாங்கலியத்தை இழப்பாள்' என்று சோதிடர் கூறிய விஷயத்தை அவளுக்குத் தெளிவாகச் சொல்லி, அதன் பொருட்டே தாங்கள் வியாகுலமுற் றிருப்பதாகச் சொன்னார்கள்.

இதைக் கேட்டவுடனே சீமந்தனி, இடிமுழக்கத்தைக் கேட்ட சர்ப்பம்போல நெஞ்சம் பதைத்து முகங்கருகி, " ஆ தெய்வமே! இதற்கோ நான் பெண்ணாகப் பிறந்தேன் ; நாயகனையிழந்த நங்கையர்க்கு நலமில்லை ; பலமில்லை; புஷ்பமில்லை ; மஞ்சளில்லை ; குங்குமமில்லை ; கூந்தலில்லை; அழகிய

கூந்தல் முடிப்பில்லை; ஆபரணமில்லை; நல்லாடையில்லை; நல்லுணவில்லை; அழகில்லை; சிறப்பில்லை; பஞ்சணை யில்லை; சந்தோஷமில்லை; அவர்களை எதிரில் கண்ட எவரும், சகுனத் தடையானார்களென்று அருவருப்பார்கள்; இத்தகைய கைம் பெண்கள் உலகத்தி லிருப்பதாற் பயனென்ன? பெண்களுக்கு எல்லாச் சிறப்புக்களும் நாயகனாலேயே ஏற்படுகின்றன; அப்பேர்ப்பட்ட கணவனை யிழந்தவர்கள் மகா பாபிக ளாவார்கள்; புருஷனுக்கு முந்தி மாங்கலியத்துடன் உயிர் துறப்பவர்களே உத்தமிக ளாவார்கள்; அப்படியிருக்க மங்கைப் பருவத்திலேயே கொண்டவனை யிழந்து கைம் பெண்ணாகும் விதி எனக் கமைந்திருக்கின்றது; நான் முற்பிறப்பில் என்ன பாதக மியற்றினேனோ! நான் இளமையிலேயே மாங்கலியத்தை யிழந்து எத்தனை காலம் வரை கைம்மை விரதத்தை அனுஷ்டிப்பேன்; அந் நிலைமையை அடைவதைக் காட்டிலும், மண முடிவதற்குள் என் உயிரை முடித்து விடுவது நலம்; அப்படி முடிப்பதற்கும் நம் செயலால் ஆவதொன்றில்லையே; பழவினைப்பயன் விதிப்படி நடந்து தானே தீரும்; அப்படி நேருமாயின் நான் அந்தத் துக்கத்தை எப்படி அனுபவிப்பேன்; இங்ஙனம் விதிப்படி வருவது வந்தே தீருமெனினும், பெரியோர்களால் அதற்கு நிவிர்த்தி மார்க்கம் ஏற்பட்டாலும் ஏற்படும்; பதினாறுவயதைப் பெற்ற மார்க்கண்டேயர் சிவபெருமான் திருவருளால், என்றும் பதினாறு வயதுடனிருக்க வரம்பெற வில்லையா? சாவித்திரியானவள், பெரியோர்களின் அனுக்கிரகத்தினால், தன் நாயகனுடைய உயிரை மீட்டுக் கொண்டு வரவில்லையா? ஆதலின், நாம் பெரியோரை அடுத்து நம்முடைய துன்பம் தீருதற்கு மார்க்கமுண்டா என்பதை விசாரித் துணர வேண்டும்; 'முயற்சி யுடையார் இகழ்ச்சி யடையார்' என்றபடி நாம்

இவ் விஷயத்தில் தீவிர முயற்சி செய்தால் அம் முயற்சி யளவாக ஏதேனும் சிறிது பயன் கிடைக்காமற்போகாது; நாம் பேதையரைப் போல் துன்பம் வந்தகாலத்தில் மயங்கி ஒரு முயற்சியும் தேடாமல் இருப்பது தகாது; அங்ஙனம் மயங்கி யிருப்பார்க்குத் துக்க நிவிர்த்திக்கு மார்க்கம் ஏற்படாது'' என்று முதலில் மயங்கிப் பின்னர்த் தெளிவடைந்து இவ்வகை முடிவு செய்துகொண்டு இதற்கு எவரிடம் செல்லலாமென்று ஆலோசித்தாள். அங்ஙனம் சிந்தித்து, யாக்ஞ வல்க்கிய முனிவர் பத்தினியாகிய மயித்திரை யென்பவளே அதற்குத் தகுதியானவளென்று தனக்குத் தோற்றியபடியால், தன்னுடைய அபிப்பிராயத்தைத் தாய் தந்தையரிடம் தெரிவித்து விடைபெற்றுக் கொண்டு சில தோழிகளின் துணையுடன் மயித்திரை யிருக்கும் பர்ண சாலை நோக்கிப் போயினள்.

அவ்வாறு சென்றவள், அவ் வம்மையைக் கண்டு வணங்கி, அவள் திருமுகத்தை நோக்கி, ''அருந்ததியை நிகர்த்த கற்பினையுடைய அம்மையே! நான், பதினன்காவது வயதில் மாங்கலியத்தை இழப்பேனென்று, சோதிடர் என் தந்தையிடம் கூறி யிருப்பதாகக் கேள்விப்பட்டேன்; அத்தகைய துர்ப்பாக்கியம் எனக்கேற்பட்டுவிடும் பக்ஷத்தில் நான் எவ்வாறு உலகத்தில் உயிருடனிருந்து வாழ்வேன்; அத்துன்பத்தை நினைக்குந் தோறும் என் மனம் காற்றிடைப்பட்ட பஞ்சுபோற் சுழல்கின்றது; அதனல் நான் மிகவும் அஞ்சி, நீ மகா பதிவிரதையா யிருப்பதனல், என் துன்பம் நீங்குவதற்கு ஏதேனுமொரு மார்க்கத்தை எனக் குணர்த்துவா யென்று கருதி நின் திருச் சமுகத்தை யடைந்தேன்; ஆதலின், தாயே! அடியாளின் துயர் அகலு மார்க்கத்தை எனக்கறிவித்து, இப்பேதையாகிய என்னை ஆதரித் தருளவேண்டும்'' என்று இரந்து கேட்டுக் கொண்

டாள். இந்த வார்த்தைகளையெல்லாம் கேட்ட மயித்திரை, சீமந்தனியின் நிலைமைக் கிரக்க முற்றுச் சிறிது நேரம் ஆலோசித்து மௌனமாயிருந்து, பின்னர் சீமந்தனியைப் பார்த்து, "மனக் கவலைகொண்டு வந்த மங்கையே! உன்னுடைய சாதகப் பயன் விதிப்படியே அமைந்திருக்கின்றது; அது நிச்சயமாக நடந்தே தீரும்; எனினும் சிவ பெருமான், உமாதேவி இவர்களின் கிருபை யுண்டாகும் பக்ஷத்தில் அது நீங்கி விடவும் கூடும்; எல்லாம்வல்ல இறைவன் இறைவி இவர்களால் ஆகாத காரியமு முண்டோ?

"ஒன்றை நினைக்கில் அதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி அதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்"

என்றபடி கடவுளர்க்கு எதையும் செய்ய வன்மையுண்டு; விதியையும் மாற்றிவிட அவரால் இயலும்; 'பிரமா நினைத்தால் ஆயுளுக்குப் பஞ்சமா?' ஆதலின், நீ பரமசிவமூர்த்தியையும், பார்வதி தேவியாரையும் வணங்கிப் பூஜித்து அவர்களுடைய கிருபையைப் பெற்றுக் கொள்; அவ்வாறு பெற்றுக் கொள்வதற்குச் சோமவார விரதம் மிகச் சிறந்ததாம்; அந்தச் சோமவாரந் தோறும், அதி காலையில் நீ பரிசுத்தமாகிய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, ஆகாரம் முதலியவற்றை நீக்கி, மௌனஞ் சாதித்து, புனிதமுடையவளாய், மலர்களை ஆராய்ந் தெடுத்து, மற்ற நிவேதனப் பொருள்களையும் சேகரித்துக் கொண்டுவந்து, சிவபெருமானுக்கும் பார்வதி தேவியாருக்கும் அபிஷேகம் முதலியன செய்து, அர்ச்சனை புரிந்து பூசையை நிறைவேற்றி, 'எல்லாவற்றிற்கும் நாதனாகிய ஈசனே! சகல சராசரங்களையும் ஈன்ற தாயாகிய பார்வதி தேவியே! உங்களுடைய திருவருளையே

நான் விரும்புகின்றேன்; உம்முடைய பாதாரவிந்தமே உற்றதுணை', என்று அவர்களைத் துதித்து வணங்கிச் சாதுக்களுக்கு அன்னமளித்து விரதத்தை நிறைவேற்றினால் அவர்களுடைய கிருபை நிச்சயமாக உனக்குண்டாகும்; அந்தக் கிருபையினால் உன்னுடைய நாயகனுக்கு வரும் தீமை நீங்கும்; பற்பல தேசங்களும் உன் கணவனது ஆளுகைக்குட்படும்; அவன் ஒரு பெரிய சக்கரவர்த்தியுமாவன்; இன்னும் அந்தச் சோமவார விரதத்தில் செய்யும் செய்கைகளுக்கேற்படும் சில முக்கியமான பயன்களையும் சொல்கிறேன் கேள்: அந்த விரத தினத்தில், பார்வதி தேவியாருக்கும் சிவபெருமானுக்கும் மஞ்சளும், சந்தனமும், மலர்களும் சாத்துவதால், உன்னுடைய நாட்டிலும், நகரத்திலும், வீட்டிலும் பற்பல வளங்களுண்டாகும்; தூபங் கொடுத்தால் சரீரத்தில் சுகந்த வாசனை பரிமளித்துக் கொண்டிருக்கும்; தீபாராதனை செய்தால் அழகுண்டாகும்; அன்னத்தை நிவேதித்தால் ஆகாரம் குறைவின்றிக் கிடைக்கும்; பாக்கும் வெற்றிலையும் நிவேதித்தால் இலக்குமி கடாக்ஷமுண்டாகும்; பஞ்சாக்ஷர ஜெபம் செய்தால் அஷ்டாங்க யோகம் சித்தியாகும்; சிவயாகம் செய்து பூர்ணாகுதி அளித்தால் இஷ்ட சித்திகள் எளிதிற் கைகூடும்; சாதுக்களுக்கு அன்னங் கொடுத்தால் தேவர்கள் மிகுந்த களிப்படைவார்கள். ஆதலின், நீ இத்தகைய சோமவார விரதத்தை முறைப்படி அனுஷ்டித்துச் சிவபெருமானையும், பார்வதி தேவியாரையும் ஒரே மனதுடன் உறுதியாக வணங்கிப் பூஜித்து வருவாயாக" என்று கூறினாள். சீமந்தனி, ஒருவாறு மனந்தேறி அவ்வாறே சோமவார விரதத்தை அனுஷ்டித்து வருவதாகச் சொல்லி மயித்திரையிடம் விடைபெற்றுக் கொண்டு திரும்பிவந்து நகரம் புகுந்து கன்னிகாமாடத்திலிருந்து, தந்தை தாயாரின் உதவிகொண்டு மயித்திரை

உரைத்த கிரமங்களில் சிறிதும் தவறாமல் சோமவாரந் தோறும் அவ்விரதத்தை அநுஷ்டித்துக்கொண்டிருந்தாள்.

அப்படி யிருக்கும்போது, அவள் தந்தையாகிய சித்திரவருமன், தன் மகள், சீமந்தனி மங்கைப் பருவத்தை யடைந்து மணமில்லா திருப்பதையும், அவளுக்கு மாங்கலிய மிழக்கும் விதியேற்பட் டிருப்பதையும் நினைந்து நினைந்து கவலைகொண்டு, "அந்தோ! நம் புத்திரியின் பரிதாப நிலைமையைப்பார்த்து நாம் மனம் வருந்திக்கொண் டிருக்கின்ற விதி நமக் கேற்பட்டிருக்கின்றது; எஃதெப்படி நேர்வதாயிருந்தாலும் இவளை மணமில்லாத கன்னியாக வீட்டில் வைத்துக்கொண்டிருப்பது தகுதியற்ற காரியமாகும்; பருவமடைந்த பெண்களை மணமின்றி வீட்டில் வைத்திருந்தால், அவ்வீடு விருத்தியடையா தென்று பெரியோர்கள் கூறி யிருக்கின்றார்கள்; சாஸ்திரங்களும் அவ்வாறே கூறுகின்றன; அப்படியிருந்தும் மங்கைப் பருவமடைந்த பெண்களைத் தகுதியானகணவனுக்கு மணஞ்செய்து கொடுத்துவிடாமல் வீட்டில் வைத்திருப்பவர்கள் மதியற்றவ ராவார்கள்; அதனால் அவர்களுக்கு நேரும் அவமானங்கள் பலவாம்; ஆதலின், நம் புத்திரிக்குக் கணவனை யிழக்கும்விதி அமைந்திருப்பினும், உலக இயற்கைப்படி அவளுக்கு இக்காலத்தில் செய்யவேண்டிய மணச்சடங்கைச் செய்துவிட வேண்டியதே கிரமமாகும்; மணத்தை முடித்துவிட்டால் நமக்குரிய கடமை தீர்ந்துவிடும்; அதன்மேல் விதிப்படிநடப்பது நடக்கட்டும்; இப்போது சோதிடர் கூறிய பலன்தான் நிச்சயமாக நடக்குமென்று நாம் எவ்வாறு நம்புவது? ஒருசமயம் தவறிப் போனாலும் போகும்; மேலும் சீமந்தனி, மயித்திரையிடம்சென்று அதற்கு நிவிர்த்திமார்க்கத்தைக்கேட்டு வந்து அத்துயர் நீங்கும் பொருட்டுச் சோமவார விரதம் அநுஷ்டித்து வருகின்றாள்; அவ்விரத மகிமையால் அவ

ளுக்கு அனுகூலமுண்டானாலும் உண்டாகக் கூடும்; வருங் கால வர்த்தமானத்தை எவரறியவல்லார்? நாம் எதைப் பற்றியும் ஆலோசனை பண்ணாமல் சீமந்தனிக்குத் திருக்கலி யாணத்தை நிறைவேற்றிவிட வேண்டும்" என்று முடிவு செய்து, மணவிஷயத்தைப் பற்றி மந்திரிகளுடன் கலந்து யோசித்துச் சீமந்தனிக்குரிய ஓர் மணமகனைத் தேடிக் கொண்டிருந்தான்.

அக்காலத்தில் நிடததேசத்தை நீதியுடன் அரசாண்ட நளச்சக்கரவர்த்தியின் புத்திரனான இந்திரசேனனுக்குச் **சந்திராங்கத**னென்னும் ஒரு புத்திரன் தோன்றி யௌவன பருவத்தை யடைந்திருந்தான். அவன், வித்தையிலும், புத்தியிலும், வனப்பிலும், வன்மையிலும் சிறந்தவன்; தெய்வ பக்தி மிகுந்தவன். அவனுக்குத் திருமணம் புரியக் கருதி, அவனுடைய தந்தையாகிய இந்திரசேனன், குலத்திலும், நலத்திலும், குணத்திலும் சிறந்த பெண்ணைத் தேடியறிந்து வந்து தன்னிடம் கூறும்படி சிற்சில தூதுவர்களைத் தேசங் கள் தோறும் அனுப்பினான். அவர்கள் பலதேசங்களுக்கும் சென்று ஆங்காங்கே பெண் விசாரித்து, முடிவில், ஆரியா வர்த்த நாட்டையடைந்து, சீமந்தனியின், அழகையும், குணாதிசயங்களையும் விசாரித்துணர்ந்து, 'இவளே நம் மன் னன் மகனுக்குத் தகுதியானவ' ளென்று நிச்சயித்து, உடனே மீண்டுவந்து அவளுடைய தன்மையைப்பற்றி இந்திரசேனனிடம் தெரிவித்தார்கள். அம்மன்னன், அவ ளையே தன் மகனுக்கு மனைவியாக்க விரும்பி, ஆரியா வர்த்த நாட்டரசனாகிய சித்திரவருமனிடத்தில் சில பெரி யோர்களை அனுப்பிச் சீமந்தனியைத் தன் மகனுக்குக் கேட்டுவரும்படி செய்தான். இந்திரசேனனால் அனுப்பப் பட்ட பெரியோர்கள், சித்திரவருமனிடம் சென்று பெண் கேட்டார்கள். இந்திரசேனன், எங்கும் பிரசித்தி பெற்ற

நளனுடைய புத்திரனுதலாலும், அவனுடைய குலத்தைப் பற்றி விசாரிக்கவேண்டியதில்லை யாதலாலும், சந்திராங்கதன் சிறந்தவனென்பதைச் சித்திரவருமன் அறிந்திருந்தானுதலாலும், தன் பெண்ணுக்கு அத்தகைய மாப்பிள்ளை கிடைப்பதை எதிர்பார்த்திருந்தானுதலாலும், அப்பெரியோர்கள் சென்று பெண் கேட்டமாத்திரத்தில், அவன், சீமந்தனியை, சந்திராங்கதனுக்குக் கொடுக்க இசைந்து, அவர்களை நோக்கி, "பெரியோர்களே! நளச்சக்கரவர்த்தியின் புதல்வராகிய இந்திரசேனர் என்னுடைய சம்பந்தத்தை விரும்பியது நான் செய்த தவப்பயனே யாகும்; 'பழம்நழுவிப் பாலில் விழுந்ததுபோ'லாயிற்று; நான் பெண் கொடுக்க இசைகின்றேன்; நீங்கள் இந்திரசேனரிடம் சென்று என் சம்மதத்தைத் தெரிவியுங்கள்" என்றுரைத்தான். அவர்கள், அவ்வாறே போய் இந்திரசேனனிடம் சித்திரவருமன் பெண்கொடுக்க இசைந்ததைக் கூறினார்கள். இந்திரசேனன் மகிழ்ந்து, அவ்வாறு தக்க பெண் பேசி முடிந்திருப்பதைத் தன் புத்திரனுகிய சந்திராங்கதனிடம் தெரிவித்து, "இப்பெண்ணை மணஞ்செய்து கொள்ள உனக்கு விருப்பந்தானு?" என்று வினவினன். அதற்குச் சந்திராங்கதன், "தந்தையே! தாய் தந்தையரும், பெரியோர்களும் கூடி ஆலோசித்து எதை முடிவுசெய்கின்றார்களோ அதற்கு இணங்குவதே புத்திசாலிகளான பிள்ளைகளின் கடமை; அப்படியிருக்க நான் தங்களுடைய நோக்கத்திற்கு இணங்காமலிருப்பேனே? அங்ஙனம் தங்களுடைய வார்த்தையை மறுப்பேனுனல், என்னைப் புத்தியுள்ள புத்திர னென்று எவர் மதிப்பார்? தாங்கள் சிறந்த விவேகமுடையவர்களாதலின், எதையும் ஆலோசித்து எனக்குப் பொருத்தமான காரியத்தையே செய்வீர்கள்; ஆதலின், தாங்கள் தீர்மானித்த விஷயத்தை நான் மனப்பூர்த்தியாக

ஏற்றுக்கொள்கின்றேன் ; 'தந்தைசொல்மிக்க மந்திரமில்லை' என்பதை நான் நன்குணர்ந்திருக்கின்றேன் " என்று கூறினான். இக்காலத்துப் பிள்ளைகள், பெரியோர்களை மதிக்காமலும், அவர்கள் செய்யும் நற்காரியங்களுக் கிணங்காமலும் தங்கள் தங்கள் இஷ்டம்போல் மனம்போனபடி யெல்லாம் நடந்து, நாகரிகமென, நாலுபேர் பார்த்து நகைக்கும் காரியங்களைச் செய்து அவமானத்தையும் கேட்டையும் அடைவது போலப் பண்டைக்காலத்திலிருந்த புதல்வர்கள் நடப்பது வழக்கமில்லை யாதலாலும், பெரியோர்க்குப் பணிவாக நடப்பதையே அவர்கள், தங்களுக்குரிய சிறந்த பூஷணமாகக் கொண்டிருந்தமையாலும், சந்திராங்கதன், அவ்வாறு தந்தையின் நோக்கம்போல் நடக்க இசைந்தான்.

அதன்மேல், இந்திரசேனன், சோதிடர்மூலம் திருமணத்துக்கு நாளை ஏற்படுத்திக்கொண்டு சித்திரவருமனுக் கறிவித்தான். சித்திரவருமன், திருக்கலியாணத்தைத் தன்னுடைய நகரத்திலேயே நடத்தவேண்டு மென்று விரும்பியபடியால், இந்திரசேனன் குறிப்பிட்ட நாளில் மணம்நடத்த, தான் இசைவதாயும், ஆனால், அந்தக் கலியாணத்தைத் தன்னுடைய நகரத்திலேயே நடத்த விரும்புவதாகவும், இந்திரசேனன், தன் புதல்வனுடனும், மற்ற பரிவாரங்களுடனும் சில தினங்களுக்கு முன்னரே புறப்பட்டுத் தன் நகரத்திற்கு வந்துவிடவேண்டுமென்றும் இந்திரசேனனுக்கு நிருப மெழுதி யனுப்பினான். அந்நிருபங் காணவே இந்திரசேனன் மகிழ்ந்து, கலியாண தினத்திற்கு நான்கு நாட்களுக்கு முந்தியே, சித்திரவருமனுடைய நகரம் நோக்கிப் பிரயாணமாகி, இரத்தினங்களாற் செய்யப்பட்ட இரதத்திலேறிப் புறப்பட்டான். சந்திராங்கதன் அழகிய குதிரை மீதேறிப் புறப்பட்டான்; அந்தப்புரத்து ஸ்திரீகளெல்லோரும் சிவிகைகளிலேறிச் சென்றார்கள் ; மற்ற இராஜகுடும்

பத்தார்களெல்லோரும் யானை, குதிரை, இரதம் முதலிய பற்பல வாகனங்களிலேறிச் சென்றார்கள்; இரதகஜதுரக பதாதிகளாகிய நால்வகைப் படைகளும் அவர்களுக்கு முன்னும் பின்னும் சூழ்ந்து சென்றன; கலியாண முரசு முதலிய மங்கள வாத்தியங்கள், முழங்கிச் சென்றன. இவ்வாறு பலவகைச் சிறப்புக்களுடன் சென்ற இந்திரசேனன், சித்திர வருமனுடைய நகரத்தை அடுத்தான். சித்திரவருமன், இந்திரசேனனுடைய வருகையை உணர்ந்து அவனை எதிர்கொண் டழைத்துப்போய் உபசரித்தான். பின்னர், இந்திர சேனனும், மற்ற சுற்றத்தார்களும், சித்திரவருமனால் அவ ரவர்கள் தகுதிக்கேற்ப அமைக்கப்பட்ட விடுதிகளில் தங்கினார்கள். சித்திரவருமனால், எல்லோருக்கும் நல்விருந்து செய்யப்பட்டது. இன்னும் பற்பல தேசத்தரசர்களும் சித்திரவருமனால் அக் கலியாணத்திற்கு வரவழைக்கப்பட்டிருந்தார்கள். பல வித்வான்களும் அங்குவந்து கூடினார்கள்.

அதன்மேல், சித்திரவருமனுடைய நகரம் அமராவதி போல் அலங்கரிக்கப்பட்டது. இந்திரனுடைய வசந்த மண்டபம் போல் கலியாண மண்டபமும் சித்திரவருமனால் அமைக்கப்பெற்றது; திருமணத்திற்குரிய பொருள்களெல்லாம் சேகரிக்கப்பட்டன. யாவும் சேகரிக்கப்பட்டபின் முகூர்த்ததினத்தன்று கலியாண மண்டபத்தில் பெரியோர்களும், அரசர்களும், அந்தணர்களும், மற்ற ஜனங்களும் வந்து கூடினார்கள். மாப்பிள்ளையாகிய சந்திராங்கதனைத் தோழர்கள் அலங்கரித்துக் கொண்டு வந்து மணவறைப் பந்தலில் சேர்த்தார்கள்; அவ்வாறே சீமந்தனியையும் தோழிகள் அலங்கரித்துக் கொண்டுவந்து சேர்த்தார்கள். வேதியர்கள் வேதவிதிப்படி ஓமம் வளர்த்துக் கலியாணத்திற்குரிய மந்திரங்களை ஜெபித்து, திருமணச் சடங்குகளை

யெல்லாம் கிரமப்படி நிறைவேற்றினார்கள். முடிவில் மங்கள வாத்தியங்களெல்லாம் கடலொலிபோல் முழங்கவும், பெரியோர்கள் ஆசீர்வதிக்கவும் சந்திராங்கதன், திருமங்கலியத்தைச் சீமந்தனியின் கழுத்தில் சேர்த்துக் கட்டினான். பெரியோர்கள், அக்ஷதைகளையும், மலர்களையும் வாரித் தம்பதிகளின் மீது இறைத்தார்கள். திருமணம் சுபமாக நிறைவேறியது. பின்னர் பெண்ணும் மாப்பிள்ளையும் ஓமகுண்டத்தை வலம் வந்து, பெரியோர்களை வணங்கி அவர்களின் ஆசியைப்பெற்றார்கள். அதன்மேல், கலியாண விருந்துகள் மிக்க சிறப்பாக நடந்தன. சில தினங்கள்வரை, பரத நாட்டியங்களும், சங்கீத வித்வான்களுடைய பாட்டுக் கச்சேரிகளும், மேளக் கச்சேரிகளும், நாடகங்களும் பண்டைக்காலத்து முறைப்படி அந்த அந்தச் சாஸ்திரக் கிரமங்களில் குறைவுறாமல் நடைபெற்றன. வித்வான்களுக்கும், வேதியர்களுக்கும், யாசகர்களுக்கும், சித்திரவருமனால் நன்கொடைகளும், தானதர்மங்களும் குறைவின்றி வழங்கப்பட்டன ; ஏழைகளுக்கு விசேஷமாக அன்னதானம செய்யப்பட்டது. சம்பந்திகளுக்கும் விசேஷ விருந்துகள் நடத்தப்பட்டன.

இவ்வாறு திருமணச் சிறப்புக்களெல்லாம் நிறைவேறிய பின்பு இந்திரசேனனும், அவனுடைய சுற்றத்தார்களும் சில தினங்கள் அங்கே தங்கியிருந்தார்கள். அதன்மேல் இந்திரசேனன், தன்னுடைய மகனையும், மருமகளையும் தன் நகரத்திற் கழைத்துச் செல்லக்கருதி, அக்கருத்தைச் சித்திரவருமனிடம் தெரிவித்தான். சித்திரவருமன், தன் புதல்விக்குத் திருமணம் நிறைவேறியதைப் பற்றி ஒருவாறு மகிழ்ச்சி யடைந்திருந்தானெனினும், சோதிடன் கூறியபடி சீமந்தனி தன் நாயகனை யிழந்துவிடுவாளோ என்னும் கவலை அவனுடைய உள்ளத்தை வாட்டிக்கொண்டிருந்

தது. அதனால், அவன், தன் மகளையும், மருமகனையும் தன்னிடத்திலேயே வைத்திருந்து, சீமந்தனியின் பதினான்காம் வயதில், சோதிடன் கூறிய பலன் நடப்பதை நேரில் பார்த்தறிய வேண்டுமென்று தீர்மானித்து, அவ்விந்திர சேனனை நோக்கி, "சக்கரவர்த்தி திருக்குமாரரே! என் குமாரத்தியையும், மருமகனையும் சில மாதங்கள்வரை இவ்விடத்திலே வைத்திருந்து பின்னர் தங்களுடைய நகரத்திற்கனுப்பலாமென்று நான் நினைத்திருக்கின்றேன்; ஆதலால் நீர் என் விருப்பத்திற் கிசையவேண்டும்" என்று சொன்னான். இந்திரசேனன், அவனுடைய வார்த்தையை மறுக்க முடியாதவனாய் அவனிஷ்டத்திற் கிணங்கி, சந்திராங்கதனையும், சீமந்தனியையும் அந்நகரத்திலேயே இருக்கும்படி செய்துவிட்டுச் சித்திரவருமனிடத்தும் மற்றவர்களிடத்தும், விடைபெற்றுக்கொண்டு தன் பரிவாரங்களுடன் புறப்பட்டுத் தன்பதியாகிய மாவிந்த நகரம் போய்ச்சேர்ந்தான்.

அதன்மேல் சீமந்தனி, தனக்கு அழகிலும், அறிவிலும் சிறந்த நாயகன் கிடைத்ததைப் பற்றி மனமகிழ்ந்து,

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்"

என்பதற்கிசைந்து, தன் கற்பைக் காப்பாற்றி, நாயகனை உபசரிப்பதில் மிக்க சிரத்தையுடையவளாய், மேன்மையான சொற்களை யுடையவளாய், இல்லற தர்மங்களிற் சோர்வில்லாதவளாய், மலரும் மணமும்போலவும், பாலும் நீரும்போலவும் அவனுடன் பொருந்தி எவரும் கொண்டாடும்படி இல்வாழ்க்கையை நடத்திவந்தாள். அப்போது, "இத்தகைய நாயகனை நாம் இழந்துவிடுங் காலமும் நேருமோ!" என்ற கவலைமாத்திரம் அவள் மனத்தை விட்டகலாதிருந்தது. சந்திராங்கதனும்,

" பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின் "

என்பதற்கிசைய மகா பதிவிரதையாகிய சீமந்தனி தனக்கு மனைவியானதைப் பற்றி, "இவளைக்காட்டிலும் நமக்குப் பெரிய செல்வம் வேறே என்ன விருக்கின்றது" என்று மனக்களிப்படைந்து அவள்மீது எப்பொழுதும் நீங்காத அன்புடையவனாய் வாழ்ந்து வந்தான். அப்படி வாழ்ந்து வரும் காலத்தில் இவ்விருவரும், இளவேனிற் பருவத்தில் சோலைகளிற் சென்று விளையாடியும், தடாகங்களிலும் ஆறுகளிலும் நீர்விளையாட்டுச் செய்தும், மாளிகையி லிருந்து நீதிநூற்களைப் படித்தும், சங்கீதம் பாடியும், வீணைமுதலிய வாத்தியக் கருவிகளை வாசித்தும் வயதின் கிரமத்திற்குத் தக்கபடி இனிமையாகப் பொழுது போக்கி வந்தார்கள். இவர்களுடைய வாழ்க்கையானது இந்திரனுடைய வாழ்க்கையைப் போன்று மிகவும் திருப்தியாக நடைபெற்றது. இவ்வித மகிழ்ச்சியான வாழ்க்கையால் சீமந்தனி, தனக்கேற்பட்டிருந்த மனக்கவலையையும் மறந்திருந்தாள். ஆனால், சோமவார விரதத்தை மாத்திரம் மறந்துவிடவில்லை. முன்னிலும் அதிகபக்தி சிரத்தையுடன் அதை நடத்தி வந்தாள். சித்திரவருமனும் அவனுடைய மனைவிமார்களும் சந்திராங்கதன், சீமந்தனி ஆகிய இருவர்களுடைய இல்வாழ்க்கையைப் பார்க்குந்தோறும், ஒரு பக்கத்தில் அளவற்ற மகிழ்ச்சியையும், மற்றொரு பக்கத்தில், "இப்படி இனிமையாக மனங்களித்து வாழ்ந்து வரும் இவர்களுக்குச் சோதிடன்கூறியபடி எங்கே பிரிவு நேர்ந்துவிடப் போகின்றதோ" என்ற கவலையும் அடைந்திருந்தார்கள்.

---

## அத்தியாயம்—3

### சந்திராங்கதன் பிரிவும், சீமந்தனி துயரும்.

சந்திராங்கதன் அங்ஙனம் சீமந்தனியுடன் இன்புற்று வாழ்ந்துவருங் காலத்தில், மேற்கூறியபடி, சோலைகளிலும், மற்ற விடங்களிலும் அவளுடன் விளையாடிப் பொழுதுபோக்குவ தன்றித் தன்னுடன் உறைந்திருந்த மெய்ந்நட்பாளரை மகிழ்விக்கவேண்டி அவர்களுடனும் சிற்சில சமயங்களிற்கூடிக் காட்டிற்குச் சென்று வேட்டையாடுதல், இளவேனிற் காலத்தில் மரங்களடர்ந்த மலைகளில் சஞ்சரித்தல், முதுவேனிற் காலத்தில் தோணியில் ஏறி நீரில் உலாவிவருதல் முதலிய செய்கைகளையும் மேற்கொண்டிருந்தான். இப்படியிருக்கும்போது சில மாதங்கள் கழிந்தபின், முதுவேனிற்பருவம் நடக்கும்போது ஒருநாள் சூரியவெப்பம் அதிகரித்திருந்தது. அதனால் சந்திராங்கதன் பகல் முழுவதும் இளமரக்கா சூழ்ந்த ஒரு தனிமாளிகையில் சீமந்தனியுடன் வசித்திருந்து, மாலைநேரத்தில், சூரிய வெப்பத்தால் நேர்ந்த சிரமத்தைத் தணித்துக்கொள்ளும் பொருட்டுத் தோழர்களுடன் சென்று தோணியிலேறி நீரில் உலாவிவர விரும்பிச் சீமந்தனியிடம் விடைபெற்றுக்கொண்டு வெளியேறிச் சென்றான். அப்பொழுது அமங்கலியாகிய ஒரு பெண்ணும், விறகுத்தலையனும் எதிரே வந்தார்கள் ; ஒரு பெண் அழும் ஒற்றைக்குரல் கேட்டது. இந்தச் சம்பவங்கள், கேடுவருவதை யுணர்த்தும் துர்ச்சகுனங்களாதலின், இச்சகுனங்களை அறிந்ததும் சீமந்தனி, சாஸ்திரப் பயிற்சி யுடையவளாதலின், தன் நாயகனுக்கு ஏதேனும் துன்பம் சம்பவிக்கக்கூடுமென் றெண்ணி அவனை நோக்கி, “ நாதா ! துர்ச்சகுனங்கள் எதிர்ப்படுகின்றன ; இவற்றால்

ஏதேனும் துன்பம் நேரக்கூடும்; ஆதலின் இன்றைக்கு நீர் வெளியிற் செல்லவேண்டாம்; நாளைக்குப் போகலாம்" என்று தடுத்தாள். அவள், நாயகனுடைய பாதுகாப்பு விஷயத்தில் மிக்க அக்கரையுடையவளாதலாலும், இயற்கையிலேயே தன்னுடைய சாதகப்பலனால் நாயகனுக்குத் தீங்கு வருமென்று சந்தேகங்கொண்டிருந்தவ ளாதலாலும் இவ்வாறு சாதாரண விஷயத்திலும் அவனை வெளியிற்போகக் கூடாதென்று தடைசெய்தாள். நாயகனைப் பாதுகாக்கும் விஷயத்தில் கண்ணுங் கருத்துமாயிருப்பது பதிவிரதைகளுடைய செயல்களுள் முக்கியமான தொன்றன்றோ?

அவள், அவ்வாறு தடுக்கவே சந்திராங்கதன் புன்சிரிப்புடன் அவளை நோக்கி, "என் ஆருயிர்க்காதலியே! 'பேதைமை யென்பது மாதர்க்கணிகலம்' என்றபடி உனக்குப் பேதைமைக்குணம் அதிகமா யிருக்கின்றது; சாதாரணமாக விளையாடிப் பொழுது போக்குதற்கு வெளியிற் செல்லும் விஷயத்திலும் நீ சகுன சாஸ்திரம் பார்க்கின்றாய்; இவ்வாறு எடுத்ததற்கெல்லாம் சாஸ்திரம் பார்த்துக்கொண்டிருந்தால் அநேக காரியங்கள் நிறைவேறாமற் போய்விடும்; நீ கருதுகிறபடியே எனக்குத் தீங்கு நேர்வதற்கு நான் பகைவரோடு போர் செய்யப் புறப்படுகின்றேனா? அல்லது வேட்டைக்குச் செல்கின்றேனா? வேறு பெருங் காரியங்களை உத்தேசித்துச் செல்கின்றேனா? இதுவோ வேடிக்கையார்த்தமாக வெளியிற் செல்லும் காரியம்; இதில் என்ன தீங்கு நேரப் போகின்றது; பெருங் காரியங்களிற் சகுனம் பார்ப்பது அவசியந்தான்; இத்தகைய சாதாரண காரியங்களிலெல்லாம் சகுனம் பார்த்துக்கொண்டிருப்பது விவேகிகளுடைய செயலன்று; உன் கருத்தின்படியே இதிலும் தீங்கு வருவதாகவே வைத்துக் கொள்வோம்; மனிதருக்கு நன்மையோ தீமையோ சம்பவிப்பது விதிப்படி நேர்வ

தாகும். அப்படி நேர்வதற் கறிகுறியாகச் சகுனம் ஏற்படு மென்று அறிவுடையோர் கூறுகின்றார்கள் ; அப்படி விதி யால் கெடுதி நேர்வதைச் சகுனம் உணர்த்தும்போது அதைக் கண்டு நாம் குறித்த விடத்திற்குச் செல்லாமல் நின்றுவிட்டால் அவ் விதிச் செயல் நிகழாமல் நீங்கி விடுமோ ? வீட்டிலிருந்தாலும் வேறொரு விதத்தால் அது நடந்துதானே தீரும் ; விதியை விலக்க வல்லவர் யாவர் ? தெய்வ சம்மதமின்றி எதுவும் உலகில் நடை பெறாது; ஆத லின், நீ கவலைப்படாம லிரு; நான் விரைவில் திரும்பி வந்து விடுகின்றேன்'' என்று அவளுக்குச் சமாதானங் கூறிவிட் டுத் தோழர்களுடன் யமுனை யாற்றை நோக்கிச் சென்றான். சீமந்தனி, கற்பிற் சிறந்த உத்தமி யாதலின், 'பதியின் வார்த்தைப்படி நடப்பவளே பதிவிரதை யாவள்' என்பதை அனுசரித்துக் கணவன் வார்த்தைக் கெதிர்மொழி யொன் றும் கூறாமல், சந்தேகப்பட்ட மனத்துடனே சிறிது தேறுதலடைந்து திரும்பித் தன் மாளிகையிற் சேர்ந்திருந் தாள். சந்திராங்கதனுக்கு அச்சமயம் கெட்ட விதி ஏற்பட் டிருந்தபடியால், அவ்வாறு மனைவி கூறியதையும் மனத்துட் கொள்ளாமல் தன் விருப்பப்படியே சென்றான். "கேடு வரும் பின்னே மதிகெட்டுவரும் முன்னே'' என்றபடி தீமை யடைவார்க்குப் புத்தி மாறுபடுதல் இயற்கையன்றோ ?

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்,"

என்றபடி, அவன் மிக்க அறிவுடையவனா யிருந்தும், ஊழ் வினையானது முந்தி அவனுடைய அறிவையும் மயக்கி, மனைவியின் சொல்லைத் தடுக்கச் செய்து அவனை யமுனை யாற்றிற் கிழுத்துக்கொண்டு போய்விட்டது.

கற்பகத்தருவைப்போல, அடுத்தார்க்கு வேண்டுவன வற்றை யெல்லாம் விருப்பந் தீரக்கொடுக்கும் ஈகையை

யுடைய சந்திராங்கதன், அவ்வாறு யமுனை யாற்றின்கரை போய்ச் சேர்ந்தவுடன், மிக்க அழகுடன் அமைக்கப்பட்ட தோணி யொன்றில் அகமகிழ்ச்சியுடன் ஏறியமர்ந்தான். தோழர்களும் அவனுடன் ஏறி அதில் உட்கார்ந்தார்கள். இவர்கள் கூட்டம் அதிகப்பட்டிருந்தபடியால் அத்தோணி யில் பாரம் அளவுக்கு மிஞ்சி அதிகரித்திருந்தது. சந்திராங் கதனும் தோழர்களும் உவகை மிகுதியால் அவ்வாறு தோணியில் பாரம் அதிகரித்திருப்பதையும் சிந்தியாதவர்க ளாய்ச் சந்தோஷ ஆரவாரம் செய்துகொண்டு, வேகமாகச் செல்லும் யமுனையின் வெள்ளத்தில் விரைவாக அத்தோணி யைச் செலுத்தினார்கள். அவ்வாறு தோணி விரைவாகச் செல்லவே, அவர்களுக்கு மேலும் மேலும் சந்தோஷம் அதிகரித்தது. அதனால், அவர்களிற் சிலர் கப்பல் பாட்டுப் பாடினார்கள்; சிலர் கைகளைத்தட்டித் தாளம் போட்டார் கள்; சிலர், எழுந்து நின்று ஆனந்தக் கூத்தாடினார்கள். மனிதர்க்குக் களிப்பும் துக்கமும் ஒரு நிலையில் நிற்கமாட்டா வாதலின், அவர்களின் சந்தோஷம் துக்கமாக மாறுங் காலம் சமீபித்து விட்டது. அந்தோ! மனிதருடைய வாழ்க்கை என்ன வாழ்க்கை! அவர்கள் அங்ஙனம் அள வற்ற ஆனந்தத்துடன் தோணியிற் செல்லுங்காலத்தில், காற்று அதிகமாக வீசியபடியாலும், அலைகள் மிகுதியாக மோதியபடியாலும், வெள்ளம் மிகக் கொந்தளிப்போடு சென்றபடியாலும், அவர்கள் சந்தோஷ மிகுதியால் தோணியை விரைவாகச் செலுத்தியபடியாலும், அதிற் கட்டியபாயானது காற்று மிகுதியால் அதனை வேகமாகச் செலுத்தியபடியாலும், அதில் பாரம் அதிகரித்திருந் தமையாலும் அத்தோணி அங்குமிங்கும் சுழன்று மோதித் திடீரென நீரில் கவிழ்ந்துவிட்டது. ஆ! என்னென்று சொல்வது விதியை! அங்ஙனம் ஓடம் கவிழ்ந்தமாத்திரத்தில்

கண்மூடித் திறப்பதற்குள், அத்தோணியிலிருந்த சந்திராங்கதனும் தோழர்களும் நீரில் மூழ்கிவிட்டார்கள். அப்போது 'ஏதேனும் இரை அகப்படுமா' என்று பசியினால் ஏக்கங் கொண்டிருந்த முதலைகள் சந்திராங்கதனுடைய தோழர்களை விழுங்கிவிட்டன. சந்திராங்கதன் இன்ன நிலைமையை அடைந்தானென்பது அத்தருணத்தில் எவராலும் உணர முடியாமற் போயிற்று.

" ஆடகச் செம்பொற் கிண்ணத் தேந்திய வலங்கற் றெண்ணீர்
கூடகங் கொண்ட வாழ்நா ளுலந்ததேற் கொல்லும் பவ்வத்
தூடகம் புக்கு முந்நீ ரழுந்தினு முய்வர் நல்லார்
பாடகம் போலச் சூழ்ந்த பழவினைப் பயத்தின்......... "

என்றபடி, ஒருவர்க்குப் பழவினைப் பயனாலே ஆயுள் முடிவு ஏற்பட்டு விடும் பக்ஷத்தில், அவர்களுக்குத் தாக சாந்தி செய்யும் பொருட்டு, அவரின் மனைவியரால் பொற் கிண்ணத்தில் ஏந்திக் கொடுக்கப்பட்ட நீரும் விக்கிக் கொண்டு அவர்களைக் கொன்றுவிடும்; நல்ல விதியை யுடையவர்கள், சமுத்திரத்தில் வீழ்ந்து அழுந்தினும் பிழைத்துக்கொள்வார்கள். ஆகையினாலே, இவர்களுக்குக் கெட்ட விதியிருந்த படியால், இவர்கள், வேடிக்கை யார்த்தமாக ஏறிச்சென்ற தோணியே இவர்களை நாசப்படுத்தி விட்டது.

இவர்களின் கதி இவ்வாறாகவே, கரையில்நின்று இவர்களுடைய ஆபத்தை யுணர்ந்த சிலர், " அந்தோ! சந்திராங்கதனும் தோழர்களும் நீரில் மூழ்கி இறந்து விட்டார்களே " என்று விசனமுற்று விரைந்தோடிச் சந்திராங்கதனுடைய மாதுலனாகிய சித்திரவருமனிடம் அதனைத் தெரிவித்தார்கள். உடனே சித்திரவருமன், அம்பேறுபட்ட சிங்கத்தைப் போல மதிமருண்டு, " ஐயோ! சோதிடர் கூறியது பலித்துவிட்டதே; நான் ஒரு சமயம் அது தவறிப் போயினும் போகக் கூடுமென்று நினைத்திருந்தேனே;

சாஸ்திரம் பொய்க்குமா? என் அருமைப் புதல்வி அமங்கலி யாயினளே ! மணமுடித்துச் சில தினங்கள் கழிவதற்குள் ளாகவே பிணமான என் மருமகன் கதியை நினைக்க என் மனம் அனலிடைப்பட்ட மெழுகுபோல் உருகுகின்றதே ; இன்பமும் துன்பமும் ஒரு நிலையினவல்லவென்பதை நான் இப்பொழுது தெரிந்து கொண்டேன் ; ஆ ! என் மரு மகனே ! உன்னுடைய அழகும், வீரமும், அறிவும் எவருக் கமையும் ! அருந்தவத்தாற் பெற்ற இத்தகைய சிறப்புடைய மருமகனை யிழந்த நான் எவ்வாறு மனஞ் சகிப்பேன்? என்னுடைய மனக் களிப்பெல்லாம் அடியோடு தொலைந் ததே ; இச் செய்தியை என் புத்திரி யுணர்ந்தால் எவ்வாறு ஆற்றுவாள் ; அவள் துயரைப்பார்த்துச் சகித்தல் என்னால் இயலுமோ ; உலக வாழ்க்கை துக்கம் நிறைந்ததென்னும் பெரியோர் வார்த்தை சரியாக விருக்கின்றது" என்று பல வாறு புலம்பி மந்திரி பிரதானிகளுடன் விரைந்து சென்று யமுனைக் கரையை அடைந்து, நீந்தத் தெரிந்த சில ஏவலா ளரை ஏவித் தன்னுடைய மருமகன் பிரேதத்தை நீரில் தேடச் செய்தான். அவர்கள் மிகுந்த பிரயாசையுடன் யமுனை வெள்ளத்தில் மூழ்கித் தேடிப் பார்த்தும், சந்தி ராங்கதனுடைய பிரேதமும் அகப்படவில்லை, அவன் தோழர்களின் சவங்களும் கிடைக்கவில்லை. அதனால் சித் திரவருமன், "அந்தோ ! பிரேதக்கிரியை செய்வதற்குக் கூட மருமகன் தேகம் அகப்படாமற் போயிற்றே" என்று முன்னினும் அதிக வருத்தத்தை யடைந்து அரண்மனைக் குத் திரும்பிச் சென்றான். அவன் புத்திரர்களும் மைத்து னன் பிரிவை யுணர்ந்து புலம்பினார்கள். அதற்குள் இச் செய்தி அந்தப்புர மெங்கும் பரவி விட்டபடியால், சந்தி ராங்கதனுடைய மாமிமார்கள் ஆற்றொணாத் துயரத்தில் மூழ்கி அழுதுபுலம்பினார்கள் ; பெண்களுக்கு, மகன்மீதிருக்

கும் விசுவாசத்தைக் காட்டினும் மருமகன்மீதுள்ள அன்பு அதிகரித்திருப்பது உலக இயற்கையன்றோ? அப்படி அவர்கள் புலம்பவே அந்தப்புரத்திலுள்ள சகல ஸ்திரீகளும் அழத்தொடங்கினார்கள். அதனால் அந்தப்புரமெங்கும் அழுகைக்குரலே மிகுந்திருந்தது. சித்திரவருமன், இச்செய்தியைத் தன் மகளுக்குத் தெரிவித்து அவள் அடையும் துன்பத்தை நேரில் பார்த்தற்கஞ்சி, அவளிடம் சென்று இதனைத் தெரிவிக்காமல் துக்க சாகரத்தில் மூழ்கியபடியே ஒரு பக்கத்தி லிருந்துவிட்டான். அவன் மனைவிமார்களும் அதேகருத்துடன் அவளுக்கிதனைத் தெரிவிக்காமல் பின்னர் தெரிவிக்கலாமென்று புலம்பிக் கொண்டிருந்தார்கள்.

இப்படி யிருக்கும்போது, வெளியிற் சென்ற தன் நாயகன் திரும்பிவரவில்லையே என்னும் ஏக்கத்துடன், தனிமாளிகையிலிருந்த சீமந்தனி, அந்தப்புரத்திலுண்டான அழுகைக் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டு நடந்த செய்தியைத் தெரிந்துகொண்டு வரும்படி ஒரு தோழியை அந்த இடத்திற்கனுப்பினாள். அவள் விரைந்துபோய்ச் சந்திராங்கதனுக்கு நேர்ந்த விபத்தை அவனுடைய மாமிமார்கள் கூற உணர்ந்து முகத்தி லறைந்தழுது கதறிக்கொண் டோடிச் சீமந்தனி பாதத்தில் மோதி வீழ்ந்து, "இராஜபுத்திரியே! நாம் சந்திராங்கதரை யிழந்து விட்டோம்" என்று அவன் செய்தியனைத்தையும் விவரமாகக் கூறிப் புலம்பினாள். உத்தமகுணத்தையுடைய தோழிகள், தங்கள் தலைவிக்கு வந்த இன்ப துன்பங்களைத், தாங்களும் அனுபவித்தல் இயற்கையன்றோ? தோழி கூறிய வார்த்தை செவியிற் புகுந்த மாத்திரத்தில், சீமந்தனி, இடியேறுண்ட சர்ப்பத்தைப்போலச் சுழன்று வீழ்ந்து மூர்ச்சித்துப் பிரக்ஞையற்றுப் போயினாள். கணவனுக்கு ஆபத்து நேர்ந்ததென்று கேள்விப்பட்டவுடனே உயிரையும் இழந்து விடுதல் பதி

விரதைகளின் இயற்கைக் குணமன்றோ? அவள் அவ்வாறு மூர்ச்சித்து வீழ்ந்த மாத்திரத்தில், பக்கத்தில் நின்ற தோழிகள், "அந்தோ! கணவன் பிரிவால் நம் தலைவியும் உயிர் துறப்பாளோ" என்று அச்சமும் துக்கமுமுடைய வர்களாய்க் கண்ணீரொழுகும் முகத்துடன் அவளைத் தூக்கி, அவள் முகத்தில் குளிர்ந்தஜலம் தெளித்து, விசிறியால் வீசி அவளுடைய மயக்கத்தைப் போக்கினார்கள். சீமந்தனி சிறிது தெளிவடைந்தாள். அவ்வாறு உணர்ச்சியுண்டாகவே, அவள், நாயகனை நினைத்து ஆற்றமுடியாத துயரத்துடன், "ஆ! என் அருமைக் காதலரே! அகன்று விட்டீரோ! இதற்கோ "என் சொல்லையும் தடுத்துச் சென்றீர்?

'நீர்மலிந்த பண்ணை நிடதத்தார் மன்னவனே!
தார்மலிந்த மார்பா! தமியே னுயிர்த்துணையே!
சீர்மலிந்த சொல்வாணர் தீயகலிக் கோடைதெறும்
கார்மலிந்த வண்கைக் களிறே! களிறேயோ!!'

'புன்னைச் செழுங்காவிற் பூவணையின் யாமடைந்த
முன்னைப் பெருமகிழ்ச்சி வேண்டாய் முனிந்துதான்
என்னைப் பிரிந்தாய்நீ யென்றாலும் யான்றமியேன்
உன்னைப் பிரிந்தாவி உய்யேன்மற் றுய்யேனே'

அந்தோ! நான் உம்மை எவ்வாறு மறப்பேன்? எங்ஙனம் உயிர் தரிப்பேன்? நான் மணவாளனைப் பிரிந்த மாபாவியாய் விட்டேனே! தாலியிழந்த சண்டாளியாய் விட்டேனே! குங்கும மிழந்த கொடும்பாவி யானேனே! மஞ்சளிழந்த பஞ்சையானேனே! பூ முடிப்பிழந்த பாவையானேனே! ஆபரணமிழந்த அமங்கலியாய் விட்டேனே! நல்லுணவிழந்த அரிவையானேனே! அன்றில் பிரிந்த பெடையானேன்; தாமரை யில்லாத் தடாகமானேன்; நீரில்லாக் குளமானேன்; நீதியில்லா அரசானேன்; மழை யில்லாப்

பயிரானேன் ; மதியில்லா இரவானேன் ; அரசில்லா நாடானேன் ; கோவிலில்லா ஊரானேன்; வேலியில்லாச் சோலையானேன் ; உயிரில்லா உடலானேன் ; துணையில்லாப் பிணையானேன் ; ஆதரவில்லா அனாதையானேன் ; மணமில்லா மலரானேன் ; வளமில்லா நிலமானேன் ; ஐயோ ! என்னை நாடோறும் மகிழ்வித்து வந்த நாதா ! விதிப்படி நடப்பதை எவராலும் விலக்கமுடியாதென்று என்னிடம் கூறிச்சென்று அவ்வாறே பழவினைப் பயனை அடைந்தீரே! சந்தோஷமாக நீர் ஏறிச் செல்லும் ஓடமே உமக்குக் கூற்றமாக அமைந்ததே ! நீர் மணமுடித்து சில தினங்கள் வரை என்னுடன் மகிழ்ச்சி யுற்றிருந்ததனால், சோதிடர் கூறிய ஜாதகப் பயன் தவறிவிட்டதென்றே நான் நினைத்தேன் ; இன்னும் நான் சோமவார விரதம் அனுஷ்டித்து வருவதால் சிவபெருமானும் உமாதேவியாரும் என்மீது கிருபை செய்து என் மங்கலியத்தை நிலைக்க வைத்து விட்டார்களென் றெண்ணினேன் ; அந்த எண்ணமெல்லாம் பாழாய்ப் போயிற்றே ; பார்வதிதேவியும் பரமசிவனும் என்மீது பக்ஷம் வைக்காமற் போயினார்களே ; மயித்திரைவாக்கும் தவறிவிட்டதே; சாதகப் பலனும் தவறாமல் நடந்துவிட்டதே ; இனி எப்போது உமது திருமுகத்தை நான் பார்க்கப்போகின்றேன்? எக்காலத்தில் உம்முடைய இனிய வார்த்தைகளைக் கேட்கப் போகின்றேன் ? உமதருகில் நானிருந்து ஆனந்தத்துடன் வார்த்தையாடுங்காலமும் இனி ஏற்படுமோ? என் அன்பே! அகங்களிக்கும் அமுதே ! தித்திக்குந்தேனே ! செல்வமிகுந்த ஸ்ரீமானே ! மன்னர் பெருமானே ! புத்திமானே ! வீரத்துரையே! மேவலர்க்குச் சிம்மேறே ! எனக்கு வாழ்வு தந்தமாநிதியே! வலிமிக்க மதகரியே! மாறா அருளுடையீர்! என்னை எவ்வாறு மறந்து சென்றீர்? நீர் என் கண்காணாமல் உயிர் நீத்தாலும் நான் உமது அழகிய தேகத்தை யேனும்

பார்க்கும் பாக்கியம் பெறாத பாவியாகி விட்டேனே; 'நாம் தான் அவளைவிட்டுப் பிரிந்து போகின்றோமே; அங்ஙனம் பிரிந்த பின் நம்முடைய தேகத்தை ஏன் அவளுக்குக் காட்டவேண்டும்' என்று எனக்கதனைக் காட்டாமல் மறைத்து விட்டீரோ? நீர் எவ்வாறு நினைப்பினும் நான் உம்மை எக்காலத்திலும் மறவேன்.

'ஆவிபோன்றவென் ஆசைநேயரே ஆற்றிலேமடிந் தீரையோ
பாவியேனது கேட்டுமேயிந்தப் பாரினிலுயிர் வாழ்கின்றேன்
கூவியேயழும் என்மனத்துயர் கூறுதற்கு முடியுமோ
தாவியேஎன்முன் வந்துதேறுதல் சாற்றுவீர்கண்ணீர் மாற்றியே'

ஆ என் உயிர் போன்ற உத்தமரே! நான் இனி ஒருபோதும் உயிர் வாழேன்; சகல நலங்களையு மிழந்து கைம்பெண்ணாய் உயிர் வாழ்வதைக் காட்டினும் வேறே இழிவென்ன இருக்கின்றது; நான் இனிமேல் உலகத்திலிருந்து தான் பயனென்ன? உம்முடைய தாய் தந்தையர் இச் செய்தியை உணர்ந்தால் என்ன பாடுபடுவார்களோ? 'பாவியை மணந்ததால் எங்கள் தவப் புதல்வன் இறந்தான்' என்று என்னை நிந்திப்பார்களோ; நான் பல வழியிலும் பழிக்காளாயினேன்; 'நாயகன் இறந்தபோதே பதிவிரதைகள் உடனே உயிரிழக்க வேண்டும், அல்லது தம்முடைய பாவம் நீங்கத் தவஞ்செய்ய வேண்டும்' என்று பெரியோர் கூறுவார்கள்; அவ்விரண்டி லொன்றைச் செய்யாதவள் கற்புடையவ ளாகமாட்டாள். நான் அவற்றி லொன்றைச் செய்யக் கடமைப்பட் டிருந்தாலும் உயிருடனிருந்து தவத்தைச் செய்ய விரும்பமாட்டேன்; ஆவியையே போக்கிக் கொள்வேன்; நாம் முறைப்படி இல்லறம் நடத்தி நற் புதல்வரைப் பெற்று நெடுங்காலம் வாழவேண்டிய வாழ்க்கையானது ஒரு பயனுமின்றி விரைவில் முடிந்து விட்டது.

'பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று
வல்லதாந் தாய்நாடிக் கோடலை தொல்லைப்
பழவினையு மன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு'

என்ற பெரியோர் வாக்கின்படி, என் பழவினைப் பயனானது தவறாமல் என்னை வந்து பற்றிக் கொண்டு எனக்கித்தகைய கதியை உண்டாக்கி விட்டது; இனிப் பலபல சொல்லிப் புலம்புவதில் பயனில்லை; இவ்வாறு புலம்புவதால் என் துன்பம் நீங்கப் போவதுமில்லை; ஆதலின், என் அருமைக் கணவரே! நீர் சென்ற விடத்திற்கு இதோ நானும் வந்து விடுகின்றேன்'' என்று நெருப்பில் வீழ்ந் திறக்கத் துணிவு கொண்டு, தன் கைகளால் வயிற்றிலும் மார்பிலும், முகத்தி லும் அறைந்து தரையில் மோதி வீழ்ந்து புரண்டு புரண்டு புலம்பிக்கொண் டிருந்தாள். தோழிகள் அவள் துயரைப் பார்த்துச் சகிக்காதவர்களாய்க் கண்ணீர்விட் டழுது கொண்டே அவளைத் தூக்கி மடியில் வைத்துப் பலவித மான தேறுதல் வார்த்தைகளை அவளுக்குக் கூறிக்கொண் டிருந்தார்கள். அவர்கள் என்ன கூறியும் அவளுடைய மனத்துயர் நீங்கவில்லை; நெருப்பில் வீழ்ந்திறக்கும் துணி வும் நீங்கவில்லை. பதிவிரதைகளின் இயற்கை இஃதன்றோ?

சீமந்தனி இவ்வாறு புலம்பிக் கொண்டிருக்க, முன் னுரைத்தவாறு மிகுந்த துக்க சாகரத்தில் மூழ்கியிருந்த சித்திரவருமன், சில முனிவர்கள், யாக்கை நிலையாமை, செல் வம் நிலையாமை முதலியவற்றை விவரமாக எடுத்துக் கூறித் தன்னைத் தேற்றத் தெளிந்து, சிறிது துக்கந்தணியப் பெற் றுத் தன் மகள் கணவனிறந்ததை யுணர்ந்து கதறிப் புலம்பு கிறா ளென்பதைக் கேள்விப்பட்டு அவளைத் தேற்றுதற்கு அவள் மாளிகைக்குச் சென்றான். சீமந்தனியின் தாயும், மற்ற அந்தப்புரத்து ஸ்திரீகளும் அவ்வாறே அவளுடைய

பரிதாப நிலைமையைக் கேள்விப்பட்டு அவளுக்குச் சமாதானம் கூறுதற்கு அவளிடம் சென்றார்கள். அவள், தன் தாய்தந்தையரையும், சுற்றத்தார்களையும் பார்த்தவுடன் முன்னிலும் துக்கம் அதிகரித்து விரைந்தோடி, அடியற்ற மரம்போலத் தந்தையின் பாதங்களில் வீழ்ந்து,

"தந்தையே நாயகனைத் தானிழந்து தாலியற்றுச்
சிந்தை மிகக்கலங்கும் தீவினையே னைக்காண
வந்தீரோ இந்த மகாபாவி மாநிலத்தில்
நொந்திரங்கும் துன்பம் நுவலற் கெளிதாமோ.

கண்ணிழந்தார் போலவென்றன் காதலனைத் தானிழந்த
பெண்ணெனக்கும் பாரில் பெருமைசிறி தேனுமுண்டோ
மண்ணிழந்து போராற்றில் வல்வினையா லேமூழ்கி
விண்ணடைந்த நாயகனை மேவியினிக் காண்பேனோ.

குணமிகுத்த மன்னவரைக் கோதையெனக் கேதேடி
மணமுடித்து வைத்து மகிழ்ந்தீர் புகழ்ந்தீரிக்
கணமுமக்குத் தீராக் கவலையையுண் டாக்கிப்
பிணமானா ரென்கணவர் பேதையென்ன செய்வேனே.

சோமவா ரத்தியற்றுந் தூயவிர தத்தாலே
தீமை கழியுமென்று திண்ணமுடன் எண்ணிமிக
நேம முறவதனை நேர்ந்துசெய்து வந்துமந்தோ
பூமிதனில் நாதனற்ற பொற்கொடிநான் ஆனேனே"

என்று புலம்பினாள். அந்நிலைமை கண்ட அவளுடைய அன்னை மனமுருகி, அவளை வாரியெடுத்து மார்புற வணைத்து, " மகளே ! வருந்தாதே ;

'ஆவாரை யாரே யழிப்ப ரதுவன்றிச்
சாவாரை யாரே தவிர்ப்பவர்—ஓவாமல்
ஐயம் புகுவாரை யாரே விலக்குவார்
மெய்யம் புவியதன் மேல்'

என்றபடி, நிலைத்திருப்பவரை எவராலும் அழித்துவிடல் முடியாது; பிச்சையெடுப்பாரை, அந்நிலையிலிருந்து உயர்ந்த நிலைக்கு மாற்றிவிட ஒருவராலும் இயலாது; இறப்பாரைப் பிழைக்கச் செய்பவர் எவருமில்லை; உலகத்தில் எதுவும் விதிப்படியே நடக்கும். ஆதலின்,

'சிறுகா பெருகா முறைபிறழ்ந்து வாரா
உறுகாலத் தூற்றுகா ஆமிடத்தே யாகும்
சிறுகாலைப் பட்ட பொறியும் அதனால்
இறுகாலத் தென்னை பரிவு'

என்றபடி தலைவிதியால் நடக்கும் செயலுக்கு வருந்துவது மதியுடையார் செய்கையன்று. மேலும் உன் நாயகனிறந்ததைப்பற்றி நீ எவ்வளவுதான் அழுது புரண்டாலும் இனி அவர் வரப்போகின்றாரோ?

'ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவாரோ மாநிலத்தீர்—வேண்டா
நமக்கும் அதுவழியே நாம்போ மளவும்
எமக்கென்னென் றிட்டுண் டிரும்'

என்று ஆன்றோர் கூறிய கட்டுரையைச் சிந்தித்துப்பார்; நாம் மண்ணிற் பிறந்த அன்றே இறப்பும் தலைமேலிருக்கின்றது; உன் நாயகர் முந்திச் சென்றால் நாமும் பிந்திச் செல்லப் போகின்றோம்; மானிட தேகத்தை யெடுத்தவர் உலகத்தில் எவ்வளவு கால மிருப்பினும் முடிவில் ஒரு நாளைக்கு இறந்தே தீரவேண்டும்; 'முடி சார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும் முடிவிலொரு பிடி சாம்பலாய் வெந்து மண்ணாவது திண்ணம்'; நீ இளமையிலேயே தாலியை இழந்து விட்டதைப் பற்றியும் வருந்துதற்கு நியாயமில்லை; உலகத்தில் சில பெண்கள் கணவனுக்குப் பின் இறப்பதும், சிலர் முன்னிறப்பதும் சகஜம்; கணவனுக்குப் பின் இறப்பவர்கள் பதிவிரதைகளாகார் என்று சிலர் கூறுவார்கள்;

அவ்வாறு கூறுதல் பொருத்தமுடையதன்று; மண்டோதரி, சுலோசனை, கண்ணகி முதலியவர்களின் கணவர்கள் அவர்களுக்கு முன் இறந்துவிட வில்லையா? இவற்றை யெல்லாம் ஆராய்ந்து நீ விசனத்தை விடுப்பாயாக" என்று பற்பல நீதிகளை எடுத்துக் காட்டி அவளுக்குத் தேறுதலான வார்த்தைகளைக் கூறினாள்.

இவைகளெல்லாம் சீமந்தனியின் செவிக்கேறவில்லை. அதனால், அவள் அழுதமுகத்தோடு அன்னையை நோக்கி, "தாயே! மிக்க துக்கத்தில் மூழ்கினவர்களுக்குத் தேறுதலுண்டாகும்படி உலகத்திலுள்ளவர்கள் பற்பல நீதிகளை எடுத்துரைப்பது இயற்கை; அவ்வியற்கையின்படியே நீயும் இச்சமாதான வார்த்தைகளைக் கூறினை; 'தலை யிடியும் காய்ச்சலும் தனக்கு வந்தால் தெரியும்' என்றபடி, துன்பத்தை யடைவார்க்கே அதன் கஷ்டம் தெரியும்; மற்றையர் அதனை யுணர மாட்டார்கள்; அதனால் அவர்கள் வாய்க்கெளிதாகச் சமாதான வார்த்தைகளைக் கூறுவார்கள். யார் என்ன கூறினும் என்னால் இத்துயர் சகிக்கமுடியாது.

கைப்பிடித்த நாயகரைக் காதலரைப் பிரிந்தந்தோ கவலையின்றி
எப்படிநா னுயிர்தரிப்பேன் மனஞ்சகிப்பே னிவ்வுலகி லின்பமற்று
இப்பருவந் தனிற்றாலி யிழந்தவெனைப் போல்மிடியர் எவருள்ளாரே
இப்படியு மெளியாளா மென்றலையி லிறையவனு மெழுதினனே.

ஆதலின், நான் இனி அரை நிமிஷமேனும் உயிர் வைத்திரேன்; அக்கினிப் பிரவேசமாகி ஆவியைப் போக்கிக் கொள்வேன்; கணவனிறந்த பின் நான் உயிருடனிருந்தால் என்னை உலகத்தார் நிந்திப்பார்கள்; பர்த்தாவையும் இழந்து நான் பழிக்கும் ஆளாகமாட்டேன்; தயவுசெய்து நீங்கள் என்னைத் தடை செய்யாதிருக்க வேண்டும்" என்று விம்மி விம்மி யழுது கதறினாள்.

அப்போது சித்திரவருமன், தன் புத்திரியின் துக்கத்தையும், உயிரைப் போக்கிக்கொள்ள ஒருப்பட்டிருக்கும் அவளுடைய உறுதிப்பாட்டையும் நோக்கி, மனத்தி லெழுந்த துயரத்தை வெளிக்குக் காட்டாமல் அடக்கிக் கொண்டு, உள்ளே வண்டாற் குடைந்து துளையாக்கப் பட்ட மரம்போல் நின்று, "அந்தோ! கணவன் பிரிவால் நம் அருமைப் புதல்வியும் உயிர் துறக்கத் துணிந்து நிற்கின்றனளே! அவ்வாறு இவளும் இறந்து விடின், நாம் மகளையும் மருமகனையும் இழந்த மாபாவியாய் விடுவோமே! இப்பொழுது எப்படியேனும் நாம் சமாதானங் கூறி இவளுடைய மரணத்தை விலக்கிவிட வேண்டும்' என்று கருதிப் பரிதாப மிகுந்த முகத்துடன் சீமந்தனியின் வாடிய முகத்தை நோக்கி, "என் அருந்தவப் புதல்வியே! நான் சொல்வதைக் கேள்: சோதிடர் கூறிய ஜாதகப்பலன், ஒரு சமயம் தவறினும் தவறக்கூடுமென்று நினைத்தே நான் உனக்கு மணமுடித்து வைத்தேன்; எனினும் அது தவறாது பலித்து விட்டது; இது பழவினைப் பயனால் நேர்ந்தது. பூவுலகிலிருப்பவர்களில் பழவினையைக் கடப்பவர்கள் எவருமில்லை;

'உறற்பால நீக்க லுறுவர்க்கு மாகா
பெறற்பா லனையவு மன்னவா மாரி
வறப்பிற் றருவாரு மில்லை யதனைச்
சிறப்பிற் றணிப் பாரு மில்'

என்ற பெரியோர் வாக்கின்படி பழவினையால் வருவதை விலக்கல் எவராலும் இயலாது. நன்மையும் நமக்குக் கடவுளால் எவ்வளவு ஏற்படுத்தப்பட்டிருக்கின்றதோ அவ்வளவு தான் கிடைக்கும்.

'ஆழ வமுக்கி முகக்கினும் ஆழ்கடல்நீர்
நாழி முகவாது நானாழி—தோழி
நிதியுங் கணவனும் நேர்படினும் தம்தம்
விதியின் பயனே பயன்'

என்ற ஆன்றோர் நீதியை நீ ஆராய்ந்து பார்; உனக்குச் சிறந்த கணவனும் நிறைந்த செல்வமும் ஏற்பட்டிருந்தும் தலைவிதியால் சுகானுபவம் இல்லாமற் போய்விட்டது. மேலும் நீ கணவன் இறந்ததற்கும் வருந்துவது தகுதியன்று; உலகத்தில் மனிதர் தோன்றுவதும் மறைவதும் இயற்கை;

'நெருநெல் உளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு'

என்றபடி இவ்வுலகத்தில் நேற்றிருந்தார் இன்றைக்கில்லாமல் இறந்தொழிவார்கள்;

'மலைமிசைத் தோன்றும் மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர்—நிலமிசைத்
துஞ்சினா ரென்றெடுத்துத் தூற்றப்பட் டாரல்லால்
எஞ்சினார் இவ்வுலகத் தில்'

என்பதற்கிணங்க, பெரிய சக்கரவர்த்திகளுங் கூட இறந்தே தீருவர்; மேலும்,

'மன்றங் கறங்க மணப்பறை யாயின
அன்றவர்க் காங்கே பிணப்பறையாய்ப்—பின்றை
ஒலித்தலு முண்டாமென் றுய்ந்துபோ மாறே
வலிக்குமா மாண்டார் மனம்'

என்ற செய்யுளில் கூறியபடி மணவறையி லிருப்பவர் அப்பொழுதே பிணமாவது முண்டு. தேகம் நிலையாமையைப் பற்றிப் பெரியோர் இன்னும் பற்பல நீதிகளையுங் கூறியிருக்கின்றனர். நீ இவற்றை யெல்லாம் ஆராய்ந்து பார்த்தால் உனக்கு மனக்கவலை நேராது. இன்னும் நீ, 'உலகத்தில்

எல்லோரும் இறப்பது இயற்கை யாளுலும் நான் அருமையான நாதனையிழந்து தனித்து எப்படி உயிர் வாழ்வேன்! ஆதலால், நானும் இறந்து போகின்றேன்' என்று சொல்லக் கூடும்; அதுவும் தக்கதன்று; நீ இதற்கு முன் எத்தனையோ ஜன்மங்களை யெடுத்திருப்பாய்; உன்நாயகனும் எத்தனையோ ஜன்மங்களை எடுத்திருப்பார்; அந்த ஜன்மங்களிலெல்லாம் நீங்கள் தம்பதிகளாகச் சேர்ந்திருக்க மாட்டீர்கள்; இனி எடுக்கும் ஜன்மங்களிலும் சேரப்போகிறதில்லை; நீங்கள் இந்த ஜன்மத்தில் நாயகன், நாயகியாக ஏற்பட்டுச் சில தினங்களே சேர்ந்திருந்தீர்கள்; இப்படி ஏற்பட்ட இரண்டு நாளை வாழ்வுக்கு நீ வருந்தவேண்டாம்; 'நாயகனேடு உடன் கட்டை யேறுகின்றவர்கள் மேலுலகத்தில் சென்று அவனேடு கூடியிருப்பார்கள்' என்று சில பெரியோர்களும் சாஸ்திரங்களுங் கூறுகிறபடி நீ இப்பொழுதிறந்தால் நாயகனிருக்குமிடம் சேர்வாய்; எனினும், அந்தப் பதவி தீர்ந்து வேறு ஜன்மம் எடுக்குங் காலத்தில் நீ நாதனை விட்டுப் பிரிந்தே தீரவேண்டும்; நீயும் உன் நாதனும் உயர்ந்த தவங்களைச் செய்து மோக்ஷவீட்டை யடைந்தால் மாத்திரந்தான் நிலைத்த வாழ்வைப் பெற்றிருப்பீர்கள்; அதனை யடைய முயற்சி செய்யாமல் வேறு எத்தனை வகையான புண்ணிய காரியங்களைச் செய்யினும் பிறப்பு நீங்காது; சாமானிய மனிதர்களுக்குப் பலபிறப்புக்கள் உண்டென்பதைப்பற்றியே பெரியோர்கள், 'அன்னை யெத்தனை யெத்தனை யன்னையோ அப்பனெத்தனை யெத்தனை அப்பனே' என்றும், 'பிள்ளை யெத்தனை யெத்தனை பிள்ளையோ பெண்டி ரெத்தனை யெத்தனை பெண்டிரோ' என்றும், 'இன்ன மெத்தனை யெத்தனை ஜன்மமோ' என்றும் கூறி யிருக்கின்றனர். இவ்வாறு நாயகன் நாயகிக்குங் கூட நீடித்த பந்துத்துவமில்லை யென்பதைப் பற்றிச்

சிறந்த புருஷனொருவன், தனக்கு மரணங் குறுகிய காலத்தில் வருந்திய தன் நாயகியைப் பார்த்து,

" தொல்லைகம் பிறவி யெண்ணி தொடுகடல் மணலும் ஆற்று
எல்லைய அவற்று ளெல்லாம் எதிலம் பிறந்து நீங்கிச்
செல்லுமக் கதிகள் தம்முள் சேரலம் சேர்ந்து நின்ற
இல்லினுள் இரண்டு நாளைச் சுற்றமே யிரங்கல் வேண்டா "

என்று கூறி யிருக்கின்றான். ஆதலின் நீ வருந்தா திருப்பாயாக" என்று சமாதானங் கூறினான்.

இவ்வளவு நீதிகளைச் சித்திரவருமன் எடுத்துக்கூறியும், சீமந்தனி, தன் நாயகனிடத்தே மிக்க பற்றுள்ளவளாதலின், மனத்தெளிவடையாமல், சித்திரவருமனை நோக்கி, " தந்தையே ! நீர் சொல்லும் நீதிகளனைத்தும் யான் ஒப்புக்கொள்ளக் கூடியவைகளே ; எனினும். கணவர் பிரிவைச் சகித்திருக்க எனக் கவ்வளவு திடசித்தமில்லை; மனிதருக்கு இவ்வுலகி லேற்படும் பந்துத்துவம் நிலைத்த தன்றாயினும், என் நாயகனோடு இங்குச் சில காலமாவது கூடி வாழ்ந்த வாழ்க்கையை மறத்தல் என்னால் இயலாது; மனிதர் உறவு பல்வேறு ஜன்மங்களில் பல்வேறு விதமாகப் பிரிந்து போவதா யிருந்தாலும், நான் இப்போது அக்கினிப் பிரவேசமாகி மேலுலகத்தில் சிலகாலமாவது என் கணவரோடு கூடியிருக்க விரும்புகிறேன் ; 'நாயகனோடு மரணமடைந்த கற்புடையார், தங்கள் தேகத்தில் உரோம வரிசைகள் எவ்வள வுண்டோ அவ்வளவு காலம் கணவருடன் சுவர்க்கத்துறைவர் ' என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. நான் அவ்வாறு கூடியிருந்து பின்னர் வேண்டுமானால் பிரிந்துவிடுகிறேன் ; ஆதலால் என்னுடைய மரணத்தை நீர் தடைசெய்யவேண்டாம் ; அக்கினிப் பிரவேசமாவதற்கு எனக்கனுமதி தரவேண்டும்" என்று கூறினாள்.

இதைக்கேட்டுச் சித்திரவருமன் மனங்கலங்கி மேலும் அவளுக்குச் சில உறுதிவாக்கியங்களை உரைக்கக்கருதி அவள் முகத்தைநோக்கி, "என்குலத்தைச் சிறப்பிக்கவந்த குமாரத்தியே! கணவனுடன் இறப்பார்க்கு மாத்திரந்தான், சுவர்க்கத்தில் கணவனுடன் உறைதல் கிடைக்குமென்றும், கணவனிறந்தபின் இருப்பார்க்குக் கிடைக்காதென்றும் நீ நினைக்க வேண்டாம்; 'கணவனை யிழந்த மங்கையர், பகலில் ஒருபோதுண்டு, தாம்பூலம், படுக்கைவெறுத்து, பூமியிற்படுத்து விரதங்களை யனுஷ்டித்துத் தேவதார்ச்சனை செய்து, கந்தமூலாதிகளைப் புசித்து, மரணமடைந்தபின் புருஷலோகமடைந்து கணவனைச்சேர்ந்து சுகித்திருப்பர்' என்றும் பதிவிரதை யிலக்கணநூல் கூறுகின்றது. உடன் கட்டை யேறுதல், கைம்மைவிரதம் அனுஷ்டித்தல் ஆகிய இரண்டுமே பதிவிரதைகளுக் குரியவைதாம்; சாஸ்திர சம்மதமானவைதாம்; இவ்விரண்டில் நீ உயிருடனிருந்து கைம்மைவிரதம் அனுஷ்டித்தல் பலவிதத்திலும் நன்மை பயக்குமென்று எனக்குத் தோன்றுகிறது. நீ நாயகன் பிரிவை ஆற்றுமல் இப்பொழுதே இறந்து விடுவாயானல், உன்பிரிவைச் சகியாமல் நானும், உன் அன்னையும் இறப்போம்; நம் சுற்றத்தார் மேன்மேலும் துக்கத்திற் குள்ளாவார்கள்; உனக்கொரு சமயம் பின்னல் நன்மை ஏற்படுவதா யிருந்தால் அதுவும் வீணாகிவிடும்; நீ இத்தனை கெடுதிகளும் இங்கே உண்டாகுமாறு புருஷனுடன் உறையச் சுவர்க்கத்திற்குச் செல்லுவது சிறப்பாகாது. நீ உயிருடனிருந்து கைம்மை விரதத்தை அனுஷ்டித்து வந்தாலும் முடிவில் உன் விருப்பப்படியே கணவனிடம்போய்ச் சேர்வாய். அஃதன்றியும் நீ இவ்வுலகத்தி லிருக்கும்போதே தெய்வச்செயலால் மீண்டும் அந்நாயகனையே அடைந்தாலும் அடைந்துவிடக் கூடும்; இப்பொழுதுதான் நாம் என்ன நிச்சயத்தைக் கண்டோம்;

உன கணவன ஆற்றில் மூழ்கியதை மாத்திரந்தான் உணாந தோம்; அவருடைய தேகமோ கண்ணிற்குப் புலப்பட வில்லை; அதனால், கடவுள் அவரை எங்கேனு மோரிடத்திற் காப்பாற்றி வைத்திருந்து, மீண்டும் நம்மிடம் சேர்த்தாலும் சேர்க்கக்கூடும்; இது, நடக்காததும், நம்பிக்கையற்ற செய லுமா யிருப்பினும் தெய்வச்செயலால் நடந்துவிடவுங் கூடும்; அவர் செயலை யாரறியவல்லார்? ஒரு சமயத்தில் தெற்குக்கடல் ஓரத்தில் போடப்பட்ட சிறிய கொம்பா னது, வடக்குக் கடலோரத்தில் போடப்பட்டநுகத்தடியின் துளையிற்போய் நுழைந்துகொள்வது முண்டு; இந்த நடத் தற்கரிய செய்கை தெய்வானுக்கிரகத்தால் நிகழ்வதன்றோ? இஃதிப்படியிருக்க, மரண மடைந்ததாகவே நம்மால் நிச் சயப்படுத்தப்பட்ட உன் கணவனும் தெய்வச்செயலால் மீண்டும் உயிர்பெற்றெழுந்துவருதல் ஏன் நேரமாட்டாது? பெரியோர்,

"நஞ்சு குடித்தாலும் நவையின்று தவம் நின்றால்
அஞ்சி யொழித்தாலு மரணில்லை தவமுலந்தால்
குஞ்சரத்தின் கோட்டிடையும் உய்வர் தவமிக்கார்
அஞ்சவில ரென்று மறனே களைகணென்பார்."

ஆதலின், உன் நாயகருக்கு நல்ல தவமும், தருமமும், விதியும் ஏற்பட்டிருந்தால், அவர், தாம் மூழ்கிய நீருக்குள் ளிருந்தும் வெளிப்பட்டு வந்துவிடுவார்; மேலும், நீ அனுஷ் டித்துவரும் சோமவார விரதபலனானது உன்னுடைய துன்பத்தை நீக்கிவிடுமென்று மயித்திரை கூறியிருக்கின் றாள்; அவள் மகா உத்தமியாதலின், அவளுடைய வார்த்தை பொய்க்காது. அவள் உரைத்தபடி உன் நாய கனை நீ மீண்டும் அடைதல் கூடும்; ஒரு சமயம் அது நடக்கா விடினும், வேறுவகையில் உன் துன்பம் நீங்கக் கூடும்; இன்னுமொரு முக்கியமான விஷயமிருக்கின்றது; 'கடவுளை

நம்பினோர் கைவிடப்படார்' என்றபடி, நீ சிவபெருமானை மனவுறுதியுடன் தியானித்துத் திங்கட்கிழமை விரதத்தை நிறைவேற்றி வந்தால், அதை உத்தேசித்தாயினும் அவர் உன்னுடைய நோக்கங்களை நிறைவேற்றித் துன்பங்களை அகற்றிவிடுவார் ; நீ உன் நாயகனை மீண்டும்பெற நினைத்து அவரை வேண்டினும், அத்தயாநிதியாகிய கடவுள் உன்னை சுமங்கலியாகச் செய்துவிடுவார் : அவர் பக்திக்கிரங்கிக் கறியாகச் சமைக்கப்பட்ட சிறுத்தொண்டர் புதல்வனாகிய சீராளனை மீண்டும் எழுப்பிவிடவில்லையா ? இன்னும் இது போன்ற எத்தனையோ அரிய செயல்களைச் செய்யவில்லையா? அவற்றைப்போலவே இதையும் செய்துவிடுவார் ; அப்படியே நீ உன் நாயகனை அடையாமற்போயினும், முடிவில் இவ்விரத பலத்தாலும், கைம்மை விரதமகிமையாலும் சுவர்க்க பதவியில் உன் நாயகனோடு சேர்ந்திருப்பாய்; இன்னமும் நீ என் சொல்லை அங்கிகரியாமல் இறந்துவிட்டால், உன் நாயகருக்கு மேற் கூறியபடி நல்ல விதியிருந்து அவர் மீண்டு வரும் பக்ஷத்தில், உன் மரணத்தை யுணர்ந்து, இப்பொழுது நீ துன்பமடைவதுபோலவே துயருறுவாரன்றோ? அத்தகைய நிலைமை யுண்டாகுமானல், நீயே உன் கணவருக்கு மிகுந்த துன்பத்தை உண்டாக்கியவளாவாய் ; அதனால் உனக்குப் பாவமும் வந்துசேரும்; ஆதலின், நீ இவற்றையெல்லாம் நன்றாக ஆராய்ந்து, உயிருடனிருந்து சோமவார விரதத்தையும், கைம்மை விரதத்தையும் கிரமமாக நடத்திவரவேண்டும் ; நான் மேலே, 'உன் நாதர் தெய்வச் செயலால் மீண்டு வந்தாலும் வருவார்,' என்று சொன்னதைக்கொண்டு அதை நிச்சயமாக நம்பிக் கைம்மை விரதம் கைக்கொள்ளாதிருக்கலாகாது. ஏனென்றால் அது சந்தேகமான விஷயம் ; அதை நம்பிக் கைம்பெண் நோன்பை அனுஷ்டிக்காதிருந்தால், உன் நாதர் ஆற்றில்

மூழ்கியதைக்கொண்டு நாமும், இந்நகரத்துள்ளாரும் அவர் இறந்துவிட்டா ரென்றே நிச்சயப்படுத்தியிருப்பதால், 'புருஷனிறந்த பின்னரும் மங்கலியத்தோடிருக்கலாமோ ?' என்று உலகத்தார் நிந்திப்பார்கள். ஆதலின், உலக இயலைத் தழுவி, நீ உன் கணவருக்கு உத்தரகிரியைகளைச் செய்து விட்டுக் கைம்மை விரதத்தை மேற்கொண்டு, சோமவார விரதத்தையும் முன்னிலும் அதிக சிரத்தையோடு அனுஷ்டித்துவா ; இவற்றால் உனக்கு மிகுந்த நன்மையுண்டாவதில் சந்தேகமில்லை; மகளே ! இனியும் என் வார்த்தைகளைத் தள்ளாதே" என்று அவளுக்கு நம்பிக்கையுண்டாதற்பொருட்டு நடக்காத காரியங்களையும் நடப்பவைகளைப் போல எடுத்துக்காட்டி அநேக சாஸ்திரக் கருத்துக்களையும், உறுதி வாக்கியங்களையும் பன்னிப்பன்னிச் சொல்லி, அவளுடைய மனத்தைத் தன்னுடைய வாக்கு வன்மையால் ஒருவாறு திருப்பினன். ஒரு வழியிற் பற்றிநிற்கும் ஒருவருடைய மனத்தை மற்றொரு வழியில் திருப்புதற்கு, நடப்பன, நடக்காதன வாகிய பற்பல கட்டுரைகளையும் விரிவாக எடுத்துக் கூறிப் பன்முறையும் வற்புறுத்துதல் அறிவுடையார்க்கு இயற்கையன்றோ ?

இவ்வாறு சித்திரவருமன் கூறியவைக ளெல்லாம் நியாயமானவைகளாகச் சீமந்தனிக்குத் தோற்றியபடியாலும், தந்தை சொல்லைத் தடுக்கக் கூடாதென்னும் எண்ணம் உதித்தமையாலும் அவள், "தந்தை சொற்படியே இருந்து பார்ப்போம்; அவர் கூறியபடி எல்லாக் காரியங்களும் நிறைவேறாவிடினும் தெய்வ கிருபையால் சில காரியங்களாவது சித்திக்கக்கூடும் ; சிவபெருமான் திருவுளச் செயல் எப்படி யிருக்கின்றதென்பதை நாம் அறியோம் " என்று துணிவு கொண்டு, ஒருவாறு மனந்தேறி விசனம் சிறிது மாறிச் சித்திரவருமன் முகத்தை நோக்கி, " பிதாவே !

உம்முடைய கட்டுரைகள் என் மனக் கலக்கத்தை மாற்றி விட்டன ; 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' என்றபடி உம்முடைய சொற்கள் மந்திரம்போல் உயர்ந்தவைகளாதலின் அவற்றை நான் ஏற்றுக்கொள்கிறேன் ;

'வெள்ளத் தனைய இடும்பை அறிவுடையான்
உள்ளத்தின் உள்ளக் கெடும்'

என்றபடி, எனக்கேற்பட்ட துன்பங்களையெல்லாம் நான் ஆராயும்போது அறிவுடையார் கொள்ளத்தக்கன வல்லவென்பது எனக்கு விளங்கிற்று; அதனால் அவை யெல்லாம் என்னை விட்டு நீங்கிவிட்டன ;

'சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்
கபாய மொருநாளு மில்லை—உபாயம்
இதுவே மதியாகும் அல்லாத வெல்லாம்
விதியே மதியாய் விடும்'

என்ற ஆன்றோர்வாக்கை அனுசரித்து நான் விதந்துவாய்ச் சிவபெருமானையும் உமாதேவியாரையும் தியானித்துச் சோமவார விரதத்தை முறைப்படி நடத்தி வருகின்றேன் ; அங்ஙனம் நடத்தி, நான் செய்யும் தீவிர முயற்சியால்,

'ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்'

என்றபடி, என் கெட்ட விதியையுங் கடந்து துன்ப நிவிர்த்தி யடைகின்றேன் ; இனி நீர், என்னுடைய நாயகர்க்கு உத்தரகிரியைகளை நிறைவேற்றி, நான் விதந்துவாவதற்குச் செய்யத்தக்க காரியங்களையும் செய்து, என் சோமவார விரதத்திற்கும் வேண்டிய அனுகூலங்களை இயற்றுவீராக" என்று சொன்னாள்.

சீமந்தனி இவ்வாறு மனந்திரும்பி யுரைத்ததைக் கேட்டவுடனே அங்கிருந்தவர்க ளெல்லோரும் விசனம்

மாறி மனத்திருப்தி யடைந்தார்கள். அதன்மேல் சித்திர வருமன், பெரியோர்களைக் கொண்டும், வேதியர்களைக் கொண்டும் சந்திராங்கதனுக்கு உத்தரகிரியை நிறைவேற்றினன். சீமந்தனி, மங்கலியம், குங்குமம், மஞ்சள், புஷ்பம் சத்துள்ள ஆகாரம் முதலியவற்றை அகற்றி, ஆபரணங்களை நீக்கி, வெள்ளுடை யணிந்து, கூந்தலை முடிக்காமல், ஒருபோதுண்டு, தரையிற் படுத்துச் சாஸ்திரக் கிரமப்படி விதந்துவாயினள். புருஷனிறந்த பின்னரும் அலங்காரங்களை நீக்க இஷ்டப்படாமல், பேருக்கு மாத்திரம் இரண்டொன்றை நீக்கி விட்டுச் சுமங்கலிகளைப்போலவே அலங்கரித்துக் கொண்டு, புதிய நாகரிகத்தைத் தழுவி, நம் அரிய சாஸ்திர முறைகளைக் கைவிட்டு இக்காலத்தில் உலாவி வரும் சில பெண்களைப் போன்றவளோ நம் சீமந்தனி; இவள் மகா உத்தமியாதலின், கணவனிறந்த விஷயத்தில் சிறிது சந்தேகமிருந்தும், 'நாதனைப் பிரிந்த நமக்கு அலங்காரமெதற்கு?' என்று மேற்கூறியபடி சகல சிறப்புக்களையும் நீக்கி விட்டு,

"இன்னு விளமை வறுமைவந் தெய்தியக்கால்
இன்னு வளவி லினியவும்—இன்னுத
நாளல்லா நாள்பூத்த நன்மலரும் போலுமே
ஆளில்லா மங்கைக் கழகு"

என்ற செய்யுளில் கணவனில்லாத பெண்ணுக்குரியதாகக் கூறிய நீதியை யனுசரித்துக் கைம்மை விரதம் பூண்டாள். இங்ஙனம் கைம்மை விரதம் பூண்டபின் அவள், சிந்திப்பார் துயரகற்றும் சிவபெருமானையும், உமாதேவியாரையும் இடைவிடாது சிந்தித்துச் சோமவாரந்தோறும் அனுஷ்டிக்க வேண்டிய விரதத்தையும் மகா பரிசுத்தத்துடன் அனுஷ்டித்து, அந்தணர்க்கும், யாசகர்க்கும், அன்னம், ஆடை, ஆபரணம், பாத்திரங்கள், முதலியவற்றை விருப்

பந் திருமட்டும் கொடுத்து எவரும் செய்தற்கரிய அந்நோன் பினைத் தீவிர வைராக்கியத்துடன் நிறைவேற்றி வந்தாள்.

இவள் செய்தி இங்ஙனமிருப்ப, சந்திராங்கதன் யமுனையில் மூழ்கியதைத் தெரிவித்து வரும்படி, சித்திர வருமன், முன்னரே, சந்திராங்கதன் தந்தையாகிய இந்திர சேனனுக்கு ஆளனுப்பி யிருந்தானாதலின், அவன் சென்று தெரிவித்ததன் மூலம், இந்திரசேனன், தன் மகனுக்கு நேர்ந்த ஆபத்தை யுணர்ந்து, சிறகிழந்த பறவை போன்று பெரியதுயர்க்கடலில் மூழ்கி, "ஐயோ! என் தவப்புதல் வனே! உலகமெல்லாம் புகழும் உன்னை நான் புத்திரனாக அடைந்ததால் அளவற்றமகிழ்ச்சியும், சீரும், சிறப்பும்பெற் றிருந்தேனே! இப்பொழுது நீ யிறந்ததால் எல்லாம் என்னை விட்டொழிந்தனவே!

'மகன்தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்'

என்பதை யனுசரித்து நீ உலகத்தார் கொண்டாடும்படி உத்தமனாய் நடந்து எல்லோரும் உன்னைப் பார்த்து, 'இவனைப் பெறுதற்கு இவனுடைய தந்தை என்ன தவத் தைச் செய்தனரோ!' என்று புகழச் செய்தனையே! அத் தகைய புத்திர இரத்தினமாகிய நின்பிரிவை நான் எவ்வாறு சகிப்பேன்? எங்ஙனம் உயிர் தரிப்பேன்?" என்று புலம்பி னான். சந்திராங்கதனுடைய தாயும், "ஆ! என் மகனே! பத்துமாதமும் சுமந்து பெற்ற என் வயிறு பற்றி யெரியும் படி நீ விண்ணுலக மடைந்தனையே!

'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்'

என்றபடி, நீ உலகத்தில் மிக்க புகழாளனாயிருக்கின்றாயென் பதை நான் உணர்ந்து, உன்னைப் பெற்றகாலத்தில் அடைந்த சந்தோஷத்தைக் காட்டிலும் பதின்மடங்கதிகமான மகிழ்ச்

சியை அடைந்திருந்தேனே! அப்படியிருக்க, நீ மணமுடித்துச் சில தினங்களுக்குள்ளாகவே மடிந்து விட்டனையே! என் அருமை மருமகள் கைம்பெண்ணாயினளே! உன்னை நான் எவ்வாறு மறப்பேன்? என் மருமகள் முகத்தில் எப்படி விழிப்பேன்?'' என்று பற்பலவாறாகப் புலம்பிக் கதறினாள். அவளுடைய சுற்றத்தார்களும் துக்கசாகரத்தில் மூழ்கினார்கள்; நிடததேசத்தா ரெல்லோரும் 'நம் இராஜகுமாரனுக்கு இத்தகைய விதியிருந்ததே' என்று மனங்கரைந்தழுதார்கள். இவ்வாறு நிடததேச முழுவதும் துக்க சமுத்திரத்தில் மூழ்கிக்கிடப்பதைச் சித்திரவருமன் உணர்ந்து, தன் பரிவாரங்களுடன் நிடத நாட்டிற்குவந்து இந்திரசேனன் முதலியவர்களுடைய துயரத்தை ஆற்றிச் சென்றான். துக்கம் நேர்ந்தகாலத்தில் சம்பந்திகள் ஒருவர்க்கொருவர் தேறுதல்கூறித் துயரத்தை மாற்றுவது உலக இயற்கையன்றோ? இவ்வாறு சித்திரவருமன், இந்திரசேனனுக்குச் சமாதானங்கூறிச் சென்றும், அவன் துக்கந்தணியாமல் புத்திரசோபத்தால் இராஜகாரியங்களைச் சரியாய்க் கவனிக்காம லிருந்தான். அதனால், அரண், படை முதலியவைகளெல்லாம் வலிமை குறைந்தன;

" முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்ட தரண் ''

" கூற்றுடன்று மேல்வரினும் கூடி யெதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை ''

என்றபடி அரசர்க்கு வலிய அரணும், படையும் இருக்க வேண்டும்; அங்ஙனமாயின், அவர்க்கு எப்பொழுதும் வெற்றியே உண்டாகும்; அவ்விரண்டு வலிமையுங் குறையின் அவரிடத்தே அபஜெயமிருக்கும். ஆதலின், இந்திரசேனனிடத்தில் மேற்கூறியபடி படைவன்மை முதலியன குறையவே, அவனை வெல்லக் கருதியிருந்த எதிரிகளுக்கு அது

வெற்றியை யுண்டாக்கத்தக்க சமயமா யிருந்தது. அதனால் அவர்கள், "இந்திரசேனனை வெல்வதற் கிது நல்லதருணமா யிருக்கின்றது; இச்சமயத்தில் அவன்மீது படையெடுத் தால்,

'ஞாலம் கருதினுங் கைகூடும் காலம்
கருதி இடத்தாற் செயின்'

என்றபடி நமக்கு நிச்சயமாக ஜெயமுண்டாகும்" என்று இரதகஜதுரகபதாதிக ளென்னும் நால்வகைப் படைக ளுடன் வந்து மாவிந்த நகரத்தை வளைந்து கோட்டையை முற்றுகையிட்டார்கள். எவ்வளவு வலிமை குறைந்திருப் பினும், எதிரிகள் வந்தபோது க்ஷத்திரியர்கள், மனமிளைத் துப் பின்னிடையார்க ளாதலின், அங்ஙனம் பகைவர்வந்து கோட்டையை வளைத்துக்கொண்டவுடனே இந்திரசேனன், கடுஞ்சினமடைந்து, தனக்குப் படைவீரர்கள் குறைந்திருப் பதையும் சிந்தியாமல், "இந்தப் பஞ்சைகளாகிய சிற்றரசர் களோ நளச்சக்கரவர்த்தியின் புத்திரனாகிய இந்திரசேனன் மீது படை யெடுப்பவர்கள்! சிங்கத்தை நரிகள் வளைந்தது போல், என்னைச் சூழ்ந்த இவர்களின் வன்மையை நான் அறிகின்றேன்; நான் இச்சமயத்தில் புத்திர சோபத்தால் வலிமை குறைந்திருக்கின்றேனென்று நினைத்தல்லவா இவர் கள் இவ்வளவு தைரியமாகப் படையெடுத்து வந்திருக்கின் றார்கள்; 'கடுகு சிறுத்தாலும் காரம்போகுமா?' 'யானை படுத்தாலும் குதிரை உயரமிராதா?' நான் இச்சமயம் படை மாட்சி குறைந்திருந்தாலும் என் வீரம் குறையுமா? நான் சண்டமாருதம் போற் பாய்ந்து இந்தப் பஞ்சைகளைப் பஞ்சுபோற் பறந்தோடச் செய்கின்றேன்" என்று வீர மொழிகளைப் பேசிக் குறைந்த தன் படைகளுடன் யுத்த கோலங் கொண்டு வெளியேறிச் சென்று சத்துருக்களுடன் எதிர்த்தான். மும்முரமான யுத்தம் நடந்தது.

'வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல்'

என்பதை அனுசரித்து இந்திரசேனன் தன் பலக்குறைவையும், எதிரியின் தலையெடுப்பையும் ஆராயாமல் எதிர்த்துக் கொண்டமையால், சிறிது நேரத்திற்குள்ளாகவே, படைகளை யிழந்து தனிப்பட்டு வலிமை குறைந்து எதிரிகளிடம் சிறைப்பட்டான்.. அதன்மேல் பகைவர்கள், அவனுடைய மனைவி, சுற்றத்தார் முதலியவர்களையும் அவனுடன் சிறைப்படுத்திக் கொண்டுபோய்க் காராக்கிரகத்திலடைத்துவிட்டு நிடத தேசத்தின் ஆளுகையைத் தம் வசப்படுத்திக் கொண்டார்கள். அந் நாட்டிலுள்ள ஜனங்களெல்லோரும், மிக்க இராஜபக்தி யுடையவர்களாதலின், தங்கள் அரசன் அபஜயமடைந்ததைப் பற்றி மனங் கலங்கி, "அந்தோ! நாம் இளவரசரை யிழந்த துக்கம் நீங்குவதற்கு முன், முடி மன்னரையும் இழக்குங் காலம் நேர்ந்ததே; நம்மை அடக்கியாளுதற்குக் கொடுங்கோல் மன்னர்கள் ஏற்பட்டார்களே! 'கொடுங்கோல் மன்னர் வாழும் நாட்டின், கொடும்புலி வாழும் காடு நன்றே' என்றபடி நாம் இனி நிடத நாட்டில் வாழ்வதைக் காட்டினும் காட்டிற் குடி புகுவது நல்லதாகும்; பெரிய சக்கரவர்த்தியின் திருக்குமாரராகிய நம் மன்னவர்க்கும் இந்நிலைமை ஏற்பட்டது வியப்பு;

'யானை எருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்
சேனைத் தலைவராய்ச் சென்றோரும்—ஏனை
வினைஉலப்ப வேறாகி வீழ்வர்தாம் கொண்ட
மனையாளை மாற்றார் கொள'

என்பதை நம் அரசர் அடைந்த நிலைமையால் நிச்சயமாகத் தெரிந்து கொண்டோம்" என்று வருந்தினார்கள். இந்திரசேனனுக்கு நேர்ந்தவற்றை யெல்லாம், சித்திரவருமன் கேள்விப்பட்டு, அவனும், மருமகனிறந்த துக்கத்தால்

வலிமை குன்றி யிருந்தானாகலின், அந்தப் பகைவருடன் போர் செய்து இந்திரசேனன் முதலியவர்களை மீட்க முடியாமல், "பட்டவிடமே படும், கெட்டகுடியே கெடும்" என்றபடி துயர்க்கடலில் மூழ்கிக் கிடக்கும் நமக்கு மேலும் மேலும் துன்பங்களே உண்டாகின்றன ; சம்பந்தியும் குடும்பத்துடன் பகைவர் கைப்பட்டார் ; நாம் அவர்க்குத் துணை புரியும் ஆற்றலின்றி யிருக்கின்றோம். இவை யெல்லாம் விதிப்படி நடக்கின்றன ; நம்மாலாவ தொன்றுமில்லை" என்று வருத்தமுற் றிருந்தான். சீமந்தனியும், தன் மாமனாருக்கும், மாமியாருக்கும் நேர்ந்த கஷ்டங்களை யுணர்ந்து, "என் நாயகர் இல்லாததாலன்றோ இவ்வகைத் துன்பங்களெல்லாம் நேர்கின்றன" என்று எண்ணுந்தோறும் எண்ணி மனம் புண்ணாகி யிருந்தாள். ஒரு துன்பமுண்டான விடத்தில் பல துன்பங்கள் அடுக்கடுக்காக விளைந்துகொண் டிருப்பது இயற்கையன்றோ ?

---

## அத்தியாயம்—4

## நீரில் மூழ்கிய சந்திராங்கதன் நல்விதியால் மரணமுறாமல் நாகலோகஞ் சேர்ந்திருத்தல்.

இவர்கள் செய்தி இப்படி யிருக்க, சந்திராங்கதன் கதி எவ்வாறாயிற்றெனில், அவன் தோழரோடு யமுனை வெள்ளத்தில் மூழ்கியவுடன், முன்னுரைத்தபடி தோழர்களை முதலைகள் விழுங்கிவிட அவன் மாத்திரம், தனக்கு நல்விதி யிருந்தபடியால் எவ்வித அபாயத்திற்கும் உட்படாமல், மூழ்கிய வேகத்தால், அவ்வெள்ளத்தினடியில் ஒரு பாகத்திலிருந்த பிலத்துவார வாயிலில் உயிருடன் போய்ச் சேர்ந்தான். அத்துவாரமானது நாகலோகஞ் செல்வது. அது, நீர் மட்டத்துக்கு மேலே வந்து யமுனை வெள்ளத்திற்குள்

கீழ் நோக்கிச் சென்றிருந்தபடியால், சந்திராங்கதன் நீரில் மூழ்கி அடிப்பாகத்திற்குப் போய் மேலே கிளம்பியபோது அத்துவாரத்திற் கிளம்பி நீர் மட்டத்திற்கு மேல் போய் நீரில்லாத பாகத்தை அடைந்துவிட்டான். அதனாலேயே அவனுக்கு மரணம் நேரவில்லை. அப்படி அவன் மரணத்தினின்றும் நீங்கி, அப்பிலத்துவாரத்தை அடைந்தவுடன், ஜலத்தை விட்டு வெளியேறி, "அந்தோ! நம் தோழர்கள் இறந்தே யிருப்பார்கள்; அவர்கள் இறந்தும், நல்விதி யிருந்து நம்மைக் காப்பாற்றி விட்டது.

நீரில் மூழ்கினும் நெடுமரத் துச்சியி லிருந்து
பாரில் வீழினும் பாம்பினாற் கடித்திடப் படினும்
வீரியங் கொளும் யானையால் மிதித்திடப் படினும்
ஊரில் நல்விதி யுடையவர் ஊறடை யாரே.

என்பது சரியாயிருக்கின்றது. நாம் சாகாதிருந்தும், இன்னதென்று தெரியாத ஓரிடத்தில் வந்து சேர்ந்திருக்கின்றோம். எங்கும் இருள் சூழ்ந்திருக்கின்றது. இஃதொரு பிலத்துவாரம் போன்றிருக்கின்றது. இதன் வழியே சென்றால் நாம் எங்குப்போய்ச் சேர்வோமோ; நாம் இனிப் போய்ச் சேருமிடம் நல்லதா யிருக்குமோ கெட்டதா யிருக்குமோ; அங்கே நமக்கு அபாயம் வருமோ சுகமுண்டாகுமோ; நம்மனைவியும், சுற்றத்தாரும் நாம் இறந்துபோய் விட்டோமென்றே நினைத்துக் கதறுவார்களே; இப்படி அவர்களுக்குத் துக்கத்தை யுண்டாக்கி, மயக்கமான விடத்தில் வந்து சேர்ந்திருக்கும் நாம் உயிருடனிருப்பதைக் காட்டினும் இறந்திருந்தால் நலமாயிருக்குமே; நம்முடைய மனைவி இதுவரை உயிருடனிருக்கின்றாளோ நம்பிரிவைச் சகிக்காமல் இறந்துவிட்டாளோ; நாம் ஒருசமயம் உயிருடன் மீண்டு மாமனாருடைய நகரத்திற்குச் சென்றால், அவளைக் காணுவோமோ காணமாட்டோமோ?" என்று தாங்கமுடி

யாத துக்கத்தை அடைந்தான். அவ்வாறடைந்தவன், சிறிது நேரம்வரை மௌனமாயிருந்து பின்னர், சற்றே தெளிவடைந்து, "நம்மை இந்த அபாயத்தினின்றும் நீக்கிக் காப்பாற்றிய கடவுள், நம் துக்கத்தையும் அகற்றுவார்; நமக்கு நேர்ந்த மரணமும் விலகி யிருப்பதால் நமக்கிப் பொழுது நற்காலம் ஏற்பட்டிருப்பதாகவே தெரிகிறது; அதனால் இனி யெல்லாம் நன்மையாகவே முடியும்; ஆதலால் நாம் இந்தப் பிலத்துவாரத்தின் வழியாகத் தைரியத்துடன் செல்வோம்" என்று துணிவுகொண்டு அதில் நுழைந்து சென்றான். சீமந்தனி அனுஷ்டித்து வந்த சோமவார விரத மகிமையினாலேயே சிவபெருமான் மனதிரங்கி நல்விதியை ஏற்படுத்தி இவனைக் காப்பாற்றினார்.

மேற்கூறியபடி சென்ற சந்திராங்கதன் நெடுந்தூரம் நடந்து முடிவில் நாகலோகத்தைச் சார்ந்த ஓர் நதியினடியிற் போய்ச்சேர்ந்தான். அங்கே ஜலம் நிறைந்திருந்தது. அதைக் கண்டவுடன், அவன், "ஐயோ! இங்கே ஜலம் நிறைந்திருக்கின்றதே; இதைக் கடந்து நாம் எப்படி வெளியேறப் போகின்றோம்" என்று மனங் கலங்கிப் பின்னர், "எப்படியும் நாம் இதிற் புகுந்துதான் தீரவேண்டும்; தைரியங்கொண்டு இதில் இறங்குவோம்; நல்விதி யிருந்தால் பிழைத்து வெளியேறுவோம்; இல்லாவிடில் சாவோம்" என்ற துணிவுடன் அந்த நீர்ப்பெருக்கில் பாய்ந்து மூழ்கி மேலே கிளம்பினான். அவ்வாறு கிளம்பியவன், ஈசுரச் செயலால் கண்மூடித் திறப்பதற்குள் அந்நதிக்கரையை அடைந்து விட்டான். உடனே அவன், "ஈசுரச் செயலை என்னென்று புகல்வது!" என்று அதிசயித்து நான்கு பக்கங்களிலும் திரும்பிப் பார்த்தான். அவ்விடம் அவன் எப்பொழுதும் பார்த்திராத சிறப்பும், வளப்பமுமுடையதாயிருந்தது. அது நாகலோகமானதால் அவனுக்கு அளவற்ற

ஆச்சரியத்தை உண்டாக்கியது. அந்நதியில் அநேகம் நாக கன்னிகைகள் நீர் விளையாட்டுச் செய்துகொண் டிருந்தார் கள். அத்தகைய ஸ்திரீகளைச் சந்திராங்கதன் எப்பொழுதும் பார்த்ததில்லை யாதலால் மிக்க வியப்புற்று, "இது நாக லோகமோ! தேவலோகமோ! இந்த மாதர்கள் இலக்குமி யினும் மேற்பட்ட அழகுடையவர்களா யிருக்கின்றார்கள்; இவர்கள் குளிக்குமிடத்திற்கு நாம் வந்து விட்டபடியால் நம்மைப் பார்த்துக் கோபிப்பார்களோ! நமக்கு வேறே தேனும் துன்ப மியற்றுவார்களோ!" என்று மதிமருண்டு நின்றான். அவன் அப்படி நின்ற சிறிது நேரத்திற்குள் அம்மாதர்கள் அவனைப்பார்த்துவிட்டார்கள். பார்த்ததும், கடவுள் அநுக்கிரகத்தால் அவன்மீது கோபங்கொள்ளா மல் பக்ஷமுடையவர்களாய், "எவனோ அன்னிய உலகத் தான் இங்கேவந்திருக்கின்றான்; அவனை யாரென்று விசாரிப் போம் வாருங்கள்" என்று அவர்களெல்லாரும் சந்திராங் கதனிடத்தில் வந்து "நீ யாவன்?" என்று வினவினார்கள். அவன் தன்னுடைய விருத்தாந்தங்களை யெல்லாம் கூறி, "என்னை நீங்கள் காப்பாற்றவேண்டும்" என்று சொன் னான். அவர்கள் "ஐயோ! இவன் மிகுந்த அவஸ்தை யடைந்து வந்திருக்கின்றான்; ஆதலால், நாம் இவனுக்குதவி செய்யவேண்டும்" என்று மனதிரங்கி அவனை அன்புடன் நோக்கி, "உனக்கு நாங்கள் தீங்கு செய்யமாட்டோம்; நீ எதற்கும் அஞ்சாதே; எங்களரசரிடம் வந்தால், அவர் உனக்கு மிக்க உதவி செய்வார்; நாங்கள் உன்னை அவரிடம் கொண்டு போய்ச் சேர்க்கின்றோம்; நீ எங்களுடன் வருகின் றாயா?" என்று கேட்டார்கள். அவர்களுடைய அன்பான வார்த்தையால் தனக்கு நன்மையுண்டாகுமென்று தெரிந்த படியால், சந்திராங்கதன், அவ்வாறே செல்வதற்குச் சம் மதித்தான்.

அதன்மேல் அம் மாதர்கள் அவனை அழைத்துக் கொண்டு போய்த் தங்கள் அரசனாகிய தக்ஷகனுடைய அரண்மனை வாயிலில் நிறுத்திவிட்டு அம்மன்னனிடம் சென்று, சந்திராங்கதனுடைய விருத்தாந்தங்களையும், வருகையையும் உணர்த்தினார்கள். தக்ஷகன், சந்திராங்கதன் மீது இரக்கங் கொண்டு, "அவனை என் முன் அழையுங்கள்" என்றான். உடனே அக் கன்னியர் சென்று சந்திராங்கதனை அழைத்துக் கொண்டு வந்து நாகராஜன் எதிரில் நிறுத்தினார்கள். ஆயிரஞ்சூரியர்கள் ஒன்றாகச்சேர்ந்து விளங்குவது போலப் பணாமகுடங்கள் தோறும் பதித்த மாணிக்கம் பிரகாசிக்கவும், நாககன்னியர்கள் சூழவும் சிம்மாசனத்தில் வீற்றிருந்த தக்ஷகனைப் பார்த்தவுடன் சந்திராங்கதன் அவனுடைய பாதங்களைப் பணிந்து நின்றான். நாகராஜன் அன்புடையவனாய் அவனைநோக்கி, "வாலிபனே! நீயாவன்? உன்னுடைய தேசம் யாது? குலம் யாது? தாய்தந்தையரெவர்?" என்று வினவினான். சந்திராங்கதன், "வளம் பொருந்திய நிடத தேசத்தை நீதியுடன் அரசாண்ட நளச் சக்கரவர்த்திக்கும், தமயந்திக்கும் புத்திரராக அவதரித்த இந்திரசேன மகாராஜர், என்னுடைய தந்தை; என்பெயர் சந்திராங்கதன்; நான், ஆரியாவர்த்த நாட்டரசர் மகளாகிய சீமந்தனியை மணஞ்செய்து சுகமாக வாழ்ந்துகொண்டிருந்தேன். அப்படி வாழுங்காலத்தில் ஒரு நாள் தோழர்களுடன் தோணியேறி யமுனையாற்றில் செல்லும்போது ஓடங்கவிழத் தோழர்களும் நானும் நீரில் மூழ்கினோம்; தோழர்கள் இன்ன கதி யாயினார்களென்பது எனக்குத் தெரியாது; நான், நல்விதியாற் பிழைத்து இங்கு வந்து சேர்ந்தேன்" என்றான். அதன்மேல் நாகராஜன், "இராஜகுமாரனே! நீயும், உன்னைச் சார்ந்தவர்களும் உண்மையாக வணங்கும் கடவுள் யாவர்?" என்று அவனை வினவினான்.

அதற்குச் சந்திராங்கதன், "சர்ப்பராஜனே! எல்லா வுலகங்களையும், சகல உயிர்களையுமுடையவர் யாவரோ, தேவர்களுக்கும் தேவரா யிருப்பவர் எவரோ, திரிபுரங்கள் எரியும்படி மேருவை வில்லாகவளைத்தவர் எவரோ, விஷமுண்டவர் எவரோ அவரே எங்களுக்குக் கடவுள்; இராஜத குணத்தால் பிரமதேவனை யுண்டாக்கிச் சிருஷ்டித் தொழில் செய்விப்பவர் எவரோ, சத்துவ குணத்தால் விஷ்ணுவை உண்டாக்கிக் காத்தற்றொழிலைச் செய்விப்பவர் எவரோ, தாமத குணத்தால் அரனை யுண்டாக்கிச் சங்காரத் தொழிலைச் செய்விப்பவர் எவரோ, அவரே எங்களை எக்காலத்தும், தம்முடைய திருவடி நீழலில் வைத்து இரக்ஷிப்பவர்; வேதங்களுக் கெல்லாம் முதல் வேதமாகியும், காரணங்களுக்கெல்லாம் முதற்காரணமாகியும், பூரண ஒளிகளுக் கெல்லாம் பூரண ஒளியாகியும் இருந்து விளங்கும் நாதர் எவரோ அவரே, நாங்கள் தியானஞ்செய்யும் நாதர்; பஞ்ச பூதங்களுக்குள் இரகசியமாகத்தங்கியும், உயிர்கட்கெல்லாம் சாக்ஷியாகியும், அவைகளில் தமக்கொரு பற்றில்லாமலும், முடிவில்லா ஆற்றலினாலே உலகங்களையெல்லாம் தம்வசப் படுத்தியும், ஒப்புயர்வில்லாமலும், எல்லாவற்றிற்கும் காரணராகியும், அன்பர்களுக்கு வரங்கொடுப்பவராகியும், முக்குணங்களினின்றும் நீங்கியவராகியும், பக்தர் மனத்தில் உண்மையாய் விளங்கும் சோதியாயுமிருக்கின்ற தெய்வமே, குருகடாக்ஷத்தினாலே நாங்கள் ஆராதனை செய்ய, எங்கள் மீது திருவுளமிரங்குந் தெய்வமாவர்; பஞ்சமாபாதகங்களையும் அடியார்களிடத்தே சேராமல் நீக்கி, அவர்களைப் பேரின்பக்கடலில் மூழ்கச்செய்யும் பரமசிவ மூர்த்தியும், அடியார்கள் தினையளவாகச்செய்யும் சிறிய பூஜையையும் பனையளவாகக்கொள்ளும் பரமனுமானவரே எங்கட்கிறைவராவர்; கங்கையைத் திருமுடியில் தரித்து, பார்வதியை

இடப்பாகத்தில் வைத்து, சர்ப்பங்களைக் குண்டலங்களாகத் திருச்செவிகளில் அணிந்து திருவடித்தாமரைகளை வேத முடியில்வைத்து, தேவர்களெல்லோரும் அழகிய கைகளைக் குவித்துத்தொழும்படி கைலையில் வீற்றிருக்கும் தேவரே எங்களை இரக்ஷிக்கும் தேவராவர்" என்று சொன்னான்.

தக்ஷகன், சிவபெருமானிடத்தில் மிகுந்த பக்தியுடைய வனாதலின்; சந்திராங்கதன் கூறிய இந்த வார்த்தைகளைக் கேட்டவுடனே அவனைச் சிவனடியார்களிற் சிறந்த பக்த னென்று மகிழ்ந்து அவனை நோக்கி, "இராஜபுத்திரனே! நீ மிகச்சிறியவனாயிருந்தும் பரமசிவ பக்தியிற் சிறந்து, அவருடைய பெருமைகளையெல்லாம் உணர்ந்து, எனக்குத்தெரியும்படி கூறினை; அதனால் நான் மிகுந்த மனக்களிப்படைந் தேன்; ஆதலால் உன்னைவிட்டு நீங்க எனக்கிஷ்டமில்லை; நீ சில காலம் இங்கே தங்கியிருக்கவேண்டும்; இந்த நாகலோக முழுவதும் மாணிக்க மயமாகவே யிருக்கும்; இங்குள்ள நாகமாதர்களெல்லோரும் அரம்பா ஸ்திரீகளை நிகர்த்தவர்கள்; பருகும் நீரெல்லாம் தேவாமிர்தமயமாகவே யிருக்கும்; சோலைகளெல்லாம் கற்பகச்சோலையை நிகர்த்திருக்கும். இங்கிருப்பவர்களுக்கு நரைதிரை பொருந்தமாட்டா; உயிர்களைக்கவர்ந்து செல்வதற்கு எமதூதர்கள் இங்கே வரமாட்டார்கள்; எல்லாவுலகங்களினும் இது சிறந்ததாகும்; இவ்வுலகத்தில் வாசஞ்செய்வது உனக்கு மிக்க இனிமையைத் தரும்; நீ செய்த தவத்தினாலேயே மண்ணுலகத்தார் எவரும் வரமுடியாத இவ்வுலகத்திற்கு வந்து சேர்ந்தாய்; இங்கே நீ கொஞ்சக்காலம் எனக்கு விருந்தினனாயிருந்துவிட்டுப் பின்னர், உன்தேசத்திற்குச் செல்லலாம்; இங்கிருப்பதால் பல நன்மைகளையடைவாய்" என்று சொன்னான்.

சந்திராங்கதன், தக்ஷகனை நோக்கி, "நாகர்க்கிறைவரே! நான் இங்கிருப்பதால் எனக்கு மிக்க சௌக்கியமே

உண்டாகும்; எனினும், என்மனைவியும், தாய் தந்தையரும், மாமன்மாமியாரும் நான் இறந்து விட்டேனென்றே நினைத்து மிகுந்த துக்கசாகரத்தில் மூழ்கியிருப்பார்கள் ; அல்லது என் பிரிவைச் சகிக்கமுடியாமல் இறந்து போனு லும் போவார்கள். அவர்கள் இன்னகதியானார்களென் பதை நான் அறியேன்; இந்நிலையில் அவர்கள் செய்திருக்க, நான் மாத்திரம் சுகத்தைப் பெரிதென்றெண்ணி இங்குத் தங்குவது தகுதியாகமாட்டாது. ஆதலால், நீர் தயவுசெய்து என்னை அனுப்பிவிடவேண்டும்" என்று வேண்டினான். அதற்கு நாகராஜன், "சந்திராங்கதா! நீ அவர்களைப்பற்றிக் கவலைப்படாதே ; அவர்கள் உயிருடன் இருக்கின்றார்கள் ; நீ இங்கே இருந்தால் என்னிடம் அநேகம் அனுகூலங்களைப் பெற்றுக்கொண்டு போகலாம்; பகைவர் ஏற்பட்டிருப்பினும் அந்த அனுகூலங்களால் அவர்களை ஜெயிக்கலாம்; அரசுரி மையை அதிகப்படுத்திக் கொள்ளலாம்; விசேஷ ஐசுவரி யத்தை அடையலாம்; தேகவன்மை, மனோதிடம் முதலிய வற்றைப் பெறலாம்; நீ என் வார்த்தையைத் தடைசெய் யாதே" என்று சொன்னான். அதன்மேல் சந்திராங்கதன், நாக ராஜனுடைய விருப்பத்தைத் தடைசெய்ய முடியாமல், அவன் சொற்படியே தனக்கு மிக்க நன்மைகள் உண்டாகு மென்னும் உறிதிபூண்டு நாகலோகத்திலேயே அவனுடன் தங்கிப் பற்பல இன்பங்களை அனுபவித்துக்கொண்டிருந் தான். மற்றவுலகங்களின் இன்பங்களைக் காட்டிலும் நாக லோகத் தின்பமானது மிகச் சிறந்ததாதலின், சந்திராங் கதன் அவ்வின்பத்தில் மூழ்கிப் பூவுலகத்தைப் பற்றிய எண்ணத்தையே மறந்துவிட்டான். அவன் அப்படியிருக் கும்போது மூன்று வருஷங்கள் கழிந்துவிட்டன.

---

## அத்தியாயம்—5

### சந்திராங்கதன் பூவுலகத்திற்குவந்து சீமந்தனியைக்காணுதல்.

மேற்கூறியபடி மூன்று வருஷங்கள் கடந்தபின்னர், சந்திராங்கதனுக்குப் பூலோகத்தின் ஞாபகம் வந்தது; மனைவியையும், சுற்றத்தார்களையும் பார்க்கவேண்டுமென்னும் எண்ண முண்டாயிற்று; அவர்களைப் பற்றிய கவலையும் அதிகரித்தது. அதனால் அவன், ஒரு சமயம், தக்ஷகனிடத்தில், "ஸர்ப்பாதிபரே! நான் இங்கேவந்து மூன்று வருடங்களாய்விட்டன; இனியும் தாமதிப்பது அழகன்று; என் சுற்றத்தார்களைப் பார்க்கவேண்டுமென்னும் அவா எனக் கதிகரிக்கின்றது; ஆதலால் நீர் இப்பொழுதேனும், பக்ஷம்வைத்து என்னைப் பூவுலகத்திற் கனுப்ப வேண்டும்" என்று சொன்னான்.

இந்த வார்த்தைகளைக்கேட்டதும் நாகராஜன், "வாஸ்தவந்தான்; நீ இங்கே வந்து அதிக நாட்களாயின; இனி நீ உன் தேசத்திற்குச் செல்லலாம்" என்று சந்திராங்கதனிடம் சொல்லி, ஒரு நல்லதினத்தில், அவனுக்கு உயர்ந்த ஆபரணங்களையும், ஆடைகளையும், இரத்தினங்களையும், பொற் காசுகளையும், உலகத்தையெல்லாம் அதிவிரைவில் சுற்றிவரத் தக்க வேகமும் வலிமையுமுள்ள ஒரு குதிரையையுங் கொடுத்து, நல்ல உணவளித்து, கூட்டுவர்க்கஞ் சேர்ந்த சந்தனக் குழம்பை மார்பில் பூசி, அப்பொருள்களைச் சுமந்துசெல்வதற்குக் கூர்மையான கோர தந்தங்களையுடைய ஓர் இராக்ஷதனையும், அவனைப் பாதுகாத்துச் செல்வதற்கு ஒரு நாக ராஜனையும் நியமித்து, "நீ இவர்களுடன் பூலோகத்திற்குச் செல்வாயாக" என்று அவன் முகத்தை நோக்கி அன்புடன் கூறினான். உடனே, சந்திராங்கதன் மகிழ்ந்து நாகராஜ

னிடம் விடைபெற்றுக்கொண்டு குதிரைமீதேறி, அந்த இராக்ஷதனுடனும், மற்றொரு நாகர்தலைவனுடனும் புறப் பட்டான். துணையாகச்சென்ற நாகர்தலைவன், அவனைப் பிலத்துவாரத்தின் வழியாக அழைத்துக் கொண்டுபோய் யமுனையாற்றின் வெள்ளத்தினடியிற் புகுந்து மேற்பாகத் தில் வெளியேறும்படி செய்தான். நாகராஜனுடைய மந்திர மகிமையாலும், துணைவந்தவர்களுடைய உதவியாலும், சந்திராங்கதன், நீரினால் எவ்வித அவஸ்தையையும் அடை யாமல், சூரியன் சமுத்திரத்தின்மேல் உதயமாவதுபோல வெள்ளத்தினின்றும் வெளியேறி, யமுனையாற்றங்கரையை அடைந்தான். அங்ஙனம் அவன் கரைசேர்ந்தது, ஒரு மனி தன் இறந்து, உயர்ந்தகதியைச் சேர்ந்து மீண்டும் ஜன்ம மெடுத்து உலகத்தில் தோன்றுவதுபோன்றிருந்தது.

மாண்டாரும் பிழைத்திடுவார் மதியிழந்து பித்தேறி
மயக்கம் நீடப்
பூண்டாரும் தெளிவடைந்து புத்தியினிற் சிறந்தவராய்ப்
புனித ராவார்
வேண்டாரின் சிறைப்பட்டார் மீண்டிடுவார் வெள்ளத்தில்
மூழ்கித் துன்பம்
நீண்டாரும் இடரின்றி வந்திடுவார் நல்லவழி
நேர்ந்த போதே.

என்றபடி நல்ல ஊழ் இருந்தபடியால் வெள்ளத்தில் மூழ்கி வேற்றுலகம் புகுந்த இச்சந்திராங்கதன் மீண்டும் பூவுலகத் திற்கு வந்துசேர்ந்தான்.

அவ்வாறு யமுனைக்கரையை அடைந்தவுடன், சந்தி ராங்கதனுக்குண்டான ஆச்சரியத்திற் களவில்லை. அவன், தான் ஓரிடத்தில் ஏறியதுறை, தோணிசெலுத்திய இடம் முதலியவற்றைப் பார்த்துப்பார்த்துத் தனக்கும் தோழ ருக்கும் நேர்ந்த அபாயத்தைப்பற்றி விசனத்தையும்,

தான் மீண்டு வந்ததைப்பற்றி மனக்களிப்பையும் அடைந்தான். பின்னர், தனக்கு அறிமுகமானவர்கள் எவர்களாவது வருகிறார்களா என்று நான்கு திசைகளிலும் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு நின்றான். அவ்வாறு நின்று சிறிதுநேரம் பார்த்துவிட்டு எவரும் வராததால், தன் மனைவி முதலியவர்கள் இருக்குமிடத்திற்குச் செல்லலாமென்று கருதிக் குதிரைமீதேறினன்.

சோமவார விரதம் அநுஷ்டித்துக்கொண்டிருந்த சீமந்தனி, தினந்தோறும் தன் தோழிகளுடன் சென்று யமுனையில் நீராடித் திரும்பிச் சிவபூஜை செய்வது வழக்கம். ஆதலால், அவ்வழக்கத்தின்படி அத்தருணத்தில் அங்கே நீராட வந்தாள். அவள் கொண்டுவந்த பூஜா திரவியங்களின் வாசனை நெடுந்தூரம் பரிமளித்துக்கொண்டிருந்தது ; அவள் அணிந்திருந்த வெள்ளை வஸ்திரமும், உருத்திராக்கமாலை முதலிய சிவச்சின்னங்களும் பிரகாசித்துக்கொண்டிருந்தன. சிறிது தூரத்திற்கப்பால் வரும்போதே சந்திராங்கதன் அவளைக்கண்டு, 'இவள் யாரோ ?' வென்று ஐயுற்று நின்றான். இதற்குள் அவள் சமீபத்தில் வந்தாள். சந்திராங்கதன் அவளைத் தன் மனைவி யென்று தெரிந்துகொண்டான். அவள், மாங்கலியத்தையும், மங்கலத்துக்குரிய ஆபரணங்களையும் இழந்திருக்கும் தோற்றத்தைக் கண்டவுடன்,

" அந்தோகான் வெள்ளத் தமிழ்ந்தியிறந் தேனென்று
சிந்தை தனில்முடிவு செய்தேயென் காதலியும்
நொந்தேகைம் பெண்ணுகி நோன்பியற்றி யேமெலிந்தாள்
இந்த விதிதான் இவட்கமைந்த தென்னேயோ. "

என்று கண்கலங்கி, "நடந்ததைப்பற்றி இனி விசனிப்பதிற் பயனில்லை. இப்பொழுதே நாம் இவளிடத்தில் 'நான்தான் உன் கணவன்' என்று சொல்லி இவளுடைய விசனத்தை

மாற்றவேண்டும் ; ஆயினும், இங்கு நடந்திருக்கும் காரியங் களை விசாரித் துணர்ந்துகொண்டு அவற்றிற்குத் தக்கபடி யோசித்துப் பின்புதான் நம்முடைய வரலாற்றைக் கூற வேண்டும்; ஏனென்றால் இன்னா னென்று தெரிவிக்காமலே நாம் சில காரியங்கள் செய்யவேண்டியிருக்கும்; நம்முடைய வரலாறு இவளுக்குத் தெரியாமலிருப்பது சில உண்மைகள் வெளிப்படுவதற் கேதுவாகும் ; இவளுடைய மனோ நிலை யைத் தெரிந்துகொள்வதற்கும் அனுகூலமாகும்'' என்று முடிவுசெய்துகொண்டு நின்றான். அவ்வித யோசனையோடு குதிரைமேலேறி நின்ற சந்திராங்கதனைச் சீமந்தனியும் பார்த்தாள். பார்த்தும் அதிக நாளாகப் பிரிந்திருந்தபடி யால் அவனைத் தன் நாயகனென்றுணர்ந்துகொள்ளவில்லை. எனினும், அவ்வாறு பார்த்தவுடன், அவளுக்கு அவனோடு ஏற்பட்ட பூர்வசம்பந்தத்தால் அவனுடைய தோற்ற மானது கனவிற் கண்டதுபோல முன் பழக்கத்தைச் சிறிது மனத்தில் உதிக்கச் செய்தது. அதனாலும், அவன் அவளு டைய கணவனேயாதலாலும், அவள் அவனை இன்னவ னென் றுணர்ந்து கொள்ளா திருந்தும் அவன்மீது அவ ளுக்கு ஒருவித அன்பு ஏற்பட்டது. அதனால் அவள் அவ னைப் பார்த்தபடியே, "இவன் யாவனோ? இவனை நாம் முன்னொரு காலத்தில் பார்த்ததாக ஞாபகமிருக்கின்றது. இவனிடத்தில் நமக்கொருவித பக்ஷமும் ஏற்படுகின்றது; ஒரு பெண்ணுக்குத் தன் நாயகனிடத்தில் எவ்வித விருப் பம் ஏற்படுமோ அவ்வித விருப்பம் ஏற்படுகின்றது ; என் னைப்போன்ற பதிவிரதைக்கு இங்ஙனம் அன்னியனிடம் மனஞ்செல்வது தகாதகாரியமாயிற்றே; இவ்வாறு மனம் மாறுபடுவதற்குக் காரணமொன்றுந் தெரியவில்லையே ; கடவுள்தான் நம்மைச் சோதிக்கின்றாரோ!'' என்று மனங் கலங்கி நின்றாள். அப்போது சந்திராங்கதன் அவளை

அன்புடன் பார்த்து, "ஏ சந்திரவதனி! நீ யார்? உன்னை விவாகஞ்செய்துகொண்டவன் யாவன்? இப்போது நீ இந்த இளமைப் பருவத்தில் கைம்பெண்ணுயிருப்பதற்குக் காரணமென்ன?" என்று வினவினன். சீமந்தனி, சற்று நாணத்தோடு மறுமொழி கூறாமல் விலகி நின்றாள்.

அப்போது மிகுந்த துக்க சாகரத்தில் மூழ்கியிருக்கும் அவளுடைய தோழிகளில் ஒருத்தி, அவனை நோக்கி, "இராஜகுமாரனே! இந்தப் பெண், இந்நாட்டரசராகிய சித்திரவருமருடைய புத்திரி; நிடதநாட்டதிபராகிய நளச் சக்கரவர்த்தியின் பௌத்திரர் சந்திராங்கத ரென்பவர் இவளுடைய கணவர்; அவர் ஒரு சமயம் தோழர்களுடன் யமுனையாற்றில் மூழ்கி யிறந்துபோனார்; அதனால் இந்த மாது, சந்திரனை யிழந்து விசனப்படுகின்ற உரோகிணி போன்று துக்க சாகரத்தில் மூழ்கித் திருமாங்கலிய மிழந்து கைம்பெண்ணுயினள்; இவள் அவ்வாறு விதந்துவாகி மூன்று வருஷங்களாகின்றன; தன் நாதனை யிழந்த அன்று முதல் இவள் இளம்பிறையணிந்த ஈசனுக்குரிய சோமவார விரதம் அனுஷ்டித்து வருகின்றாள்; அதன்பொருட்டு இன்று ஸ்நானஞ்செய்ய விரும்பித் தோழியருடன் இங்கே வந்தாள். இவளுடைய கணவராகிய வீர புருஷர் இறந்த செய்தியை உணர்ந்த பகைவர்கள் நிடதநாட்டின்மீது படையெடுத்து வந்து அவருடைய தந்தையையும், தாயையும் பிடித்துச்சிறையில் சேர்த்துவிட்டு அந்நாட்டைக் கைவசப் படுத்திக்கொண்டு ஆட்சிபுரிந்து வருகின்றார்கள்; இவ்வாறு பலவகை இடையூறுகள் நேர்ந்ததால் இவளும்,இவளுடைய சுற்றத்தார்களும் மனத்துய ரடைந்திருக்கின்றார்கள்" என்று சொன்னாள். அவன், "சந்திராங்கதனுடன் ஆற்றில் மூழ்கிய தோழர்கள் பிழைத்து மீண்டுவரவில்லையோ? என்று வினவினன். அதற்குத் தோழி, "அவர்களும்

இறந்தே போய்விட்டார்கள்; அவர்களுடைய பிரேதங்கள் கூட அகப்படவில்லை'' என்று சொன்னாள். அறிவுடையவர்களுக்கு மற்றவர்களிடத்துள்ள அன்பைக் காட்டினும், தோழர்மீதுள்ள அன்பு விசேஷமாயிருப்பது இயற்கையன்றோ ? அதனாலேயே சந்திராங்கதன் இச்சமயத்திலும் இவ்வாறு தோழர்கள் செய்தியை ஞாபகத்தோடு வினவினான்.

இவற்றை யெல்லாம் கேட்டதும், சந்திராங்கதன், தோழர்கள் இறந்ததற்கும், தாய் தந்தையர் சிறைப்பட்டதற்கும், மனைவி துக்க சாகரத்தில் மூழ்கியிருப்பதற்கும் ஆற்றொணாத் துயரத்தையும், பகைவர் தன் நாட்டைக் கைப்பற்றியதற்குக் கோபத்தையும் அடைந்து, ''அந்தோ! என் தோழர்களும் இறந்தார்கள்; நான் மறைந்ததால் என் மனைவியும், அவள் சுற்றத்தாரும் துயருற்றார்கள் ; பயந் தொடுங்கிக்கிடந்த பகைவர் தலையெடுத்தார்கள்; புலியில்லாக் காட்டில் பூனை அரசுசெய்வதுபோல் நான் இல்லா நாட்டில் அவர்கள் அரசுசெய்கிறார்கள்; அவர்களுடைய வல்லமையை நான் அறிகின்றேன்; இப்பொழுதே அங்குச் சென்று,

சற்றுமோர் பகையை வெல்லத் தைரிய மில்லா அந்தப்
பற்றலர் தலைக ளெல்லாம் பாரினில் முடிக ளோடு
அற்றுவீழ்ந் திடவே வாளால் அடலொடு வீசி யென்றன்
வெற்றியை நிறுத்தே னாகில் வேந்தரிற் பேடி நானே.

ஆதலின் சீக்கிரம் நிடதநாட்டிற்குச் செல்லவேண்டும்; பகைவரை யொழித்துத் தந்தை தாயாரைச் சிறை நீக்கிய பின்னரே மற்ற காரியம் பார்க்கவேண்டும்; இத்தருணத்தில், நாம் சீமந்தனியிடம் அன்னியனைப்போலவே நடித்து,இவள் துயரம் நீங்குதற்கான சில உறுதிமொழிகளைக்கூறிஇவளைத் தேற்றிவிட்டுப் போய்ப் பகைமுடிக்கவேண்டும்: அதன்

மேல் இவளிடம் மீண்டுவந்து நாம் இன்னவ னென்பதைத் தெரிவிக்கலாம் ;

தந்தைதாய் பாலர்பசு சற்குருமூத் தோர்தவஞ்செய்
அந்தணர்கள் கோயில் அழுந்தினோர் யாசகர்கள்
இந்த வுலகிலிடர் எய்திறல் அத்துயரைச்
சிந்தை பரிந்துடனே தீராதார் பேதையரே.

தந்தை தாய்க்குத் தீங்குவந்ததெனக் கேள்விப்பட்டும், உடனே நாம் அதை நீக்காவிடின் நமக்குப் பெருமை யென்னவிருக்கின்றது !" என்று மனதிற்குள் நினைத்து முகத்தில் விசனக்குறியும், கோபக்குறியும் விளங்க நின்று, சில வார்த்தைகள் சொல்வதற்குச் சீமந்தனியின் முகத்தை நோக்கினன். அதற்குள், தோழி கூறிய வார்த்தைகளைக் கேட்டவுடன், சந்திராங்கதன் முகத்தில் விசனக்குறியும் கோபக்குறியும் விளங்கியதைச் சீமந்தனி பார்த்து, "நம் முடைய செய்தியையும், நம்மைச் சார்ந்தவர்களுடைய செய்தியையும், நிடதநாட்டிற் பகைவர் புகுந்த செய்தியையும் கேட்டவுடன் இவனிடத்தில் துக்கமுங் கோபமும் உற்பத்தியாயிருக்கின்றனவே; இவ்வா றுண்டானதற்குக் காரணமென்ன ? இவன் ஏதேனு மொருவகையில் நம்மைச் சார்ந்தவனா யிருந்தால் மாத்திரந்தானே இவனிடத்தில் இக்குறிகள் தோற்றக்கூடும் ; நம்மனத்தே இவன்மீது அன்புண்டாவதாலும், இவன் முகத்தில் இக்குறிகள் தோற்றுவதாலும், இவன், நமக்கு நெருங்கிய பந்துவாயிருப் பானே என்னும் சந்தேகமுதிக்கின்றது. ஆதலால், நாமே நேரில் இவனிடம் வினவி இவனுடைய விருத்தாந்தத்தை யுணர்ந்துகொள்ளவேண்டும்; அம்பிகை நம் நாயகனையே மீண்டும் நம்மிடம் கொண்டுவந்து சேர்த்திருந்தாலு மிருப்பாள் ; இந்த முக்கியமான காரியத்தில் நாம் நாணப்பட்டு நிற்பது கூடாது" என்று, வெட்கத்தை யகற்றித் தலை

நிமிர்ந்து சந்திராங்கதனுடைய முகத்தைப் பார்த்து, "பொன்னுபரணங்களை யணிந்த மார்பையுடைய மன்னவனே! நீ கருப்புவில்லையுடைய மன்மதனைப் போலவே அழகுடையவனாய் விளங்குகின்றாய்; நீ யார்? இவ்வுலகத்திற் பிறந்த இராஜகுமாரனோ? சுவர்க்கத்தில் வாசஞ்செய்யும் தேவகுமாரனோ? என்னுடைய துன்பங்களையும், என் சுற்றத்தார் துன்பங்களையும், நிடததேசத்தரசர் துன்பத்தையும், அந்நாட்டிற் புகுந்த பகைவர் தலையெடுப்பையும் நீ மிக்க கவனத்துடன் கேட்டனை; கேட்டதும் உன் முகத்தில் துக்கக் குறியும் கோபக்குறியும் விளங்குகின்றன; அவ்வாறு தோற்றுவதால் என்னுடைய கூட்டத்தாருக்கும், உனக்கும் ஏதோ ஒருவித சம்பந்த மிருக்கக்கூடு மென்று நான் நினைக்கின்றேன்; ஆதலின் உன்னுடைய விருத்தாந்தங்களை நான் சந்தேகமற உணர்ந்துகொள்ளும்படி நீ கூறவேண்டும்" என்றுசொன்னாள்.

அவள் இவ்வாறு வினவ, சந்திராங்கதன், "சற்குணங்கள் நிறைந்த மாதே! நான் மனிதர் வகுப்பைச் சார்ந்தவனல்லன்; சித்திகளைப்பெற்ற தேவரில் ஒருவன்; எல்லா வுலகங்களுக்கும் அதிவிரைவிற் சென்றுவரும் அரிய வித்தையைக் கற்றவன்; உன்னிடத்தில் நான் இன்னுமொரு இரகசிய சமாசாரம் சொல்லவேண்டும்; நீ என் சமீபத்தில் வா" என்று செங்காந்தள் மலர்போன்ற அவளுடைய கரத்தை, தாமரை மலர்போன்ற தன் கையால்பற்றி அவளை அழைத்தான். அவன் அவ்வாறு கையைப்பற்றியதானது, அவளுக்குத் தன் நாயகன் முற்காலத்தில் தன் கையைப் பற்றியது போன்றிருந்தது. அவன், அவளுடைய சொந்த நாயகனே யாதலின் அவளிடத்தே அப்பொழுது அவ்வகை உணர்ச்சியுண்டாயிற்று. அதனால், அவள், தன் கணவன் ஞாபகத்தையே மனத்தில்வைத்து, அவனே கையைப்பற்றி

னுன் என்னும் பாவனையுடன், திடுமென நேர்ந்த அச்சம்பவத்தால் ஒருவித பிரமையடைந்து, அவன் தன்னைத் தொட்டதற்கு அருவருப்புக் கொள்ளாமல் சமீபத்தில் நெருங்கி நின்றாள். 'இவன் நம் கணவனு யிருப்பானே?' என்னுமோர் எண்ணம் அவள் மனத்தில் உதித்ததனுலேயே, இவ்விஷயத்தில் அவ்வாறு அருவருப்படையா திருந்தாள். திடுமென நேரும் சம்பவத்தாலும், சந்தேகத்தாலும் ஸ்திரீகள் இவ்வாறு மெய்ம்மறந்து நின்று பின் தெளிவடைந்து, அச்செய்கை சரியானதாயிருந்தால் அதற்குடன்படுவதும், கெட்டதா யிருந்தால் அதனை நீக்கிவிடுவதும், அவர்களின் பேதைக் குணத்தின் இயற்கையன்றோ? இவ்வாறு சந்திராங்கதன், சீமந்தனி கையைப் பற்றியதைப் பார்த்தவுடனே, பக்கத்தில் நின்ற தோழிகள், "இஃதென்ன! இவன் கூசாமல் நம் தலைவியின் கையைப் பிடிக்கின்றனே; அவளும் அதற்கு வெறுப்படையா திருக்கின்றளே; அவளுடைய மனவுறுதி கெட்டுத் தீயவழியிற் பிரவேசித்துவிட்டதோ? அல்லது, அவன், சந்திராங்கதனு யிருப்பானே? அவனுடைய பேச்சால் அவன் தன் நாயகனென்னும் குறிப்பைத் தெரிந்துகொண்டுதான் அவள் இச்செய்கைக்கு அருவருப்படையா திருக்கின்றளோ? இச்செய்கை யாதாய் முடியுமோ? இதனுல் தீங்கு நேருமோ, நன்மை யுண்டாகுமோ? நமக்கொன்றும் விளங்கவில்லையே; நாம் இதைத் தடுப்பதாயிருந்தாலும் விஷயத்தை இன்னதென் றுணர்ந்துகொண்ட பின்னரன்றோ தடுக்கவேண்டும்; இஃதனுகூலமான செய்கையா யிருந்தால் நாம் தடுப்பது கெடுதியாக முடிவதோடு அவளுக்கும் வெறுப்பையன்றோ உண்டாக்கிவிடும்; எதற்கும் நாம் சிறிதுநேரம் தாமதித்து இனி என்ன நடக்கின்றதென்பதைப் பார்ப்போம்; நாம் கூறிய விஷயங்களை இவன் மிகுந்த அக்கரையோடு கேட்ட

தால் ஏதேனும் ஒருவகையில் நம் கூட்டத்தாரோடு சம்பந் தப் பட்டவனாயிருப்பானென் றெண்ணுவதற் கிடமுண்டா கின்றது." என்று மிகுந்த மனக்குழப்ப முடையவர்களாய், சந்தேகமும், வெறுப்பும், அச்சமும் அடைந்து நின்றார்கள்.

சீமந்தனியின் கரத்தைப்பற்றிய சந்திராங்கதன், அவ ளுடைய உள்ளக் குறிப்பையும், தோழிகளுடைய மனப் போக்கையும் முகக்குறிகளால் தெரிந்துகொண்டு, "இன் னும் சில தினங்கள்வரை இவர்களை இத்தகைய கலக்கத்தி லேயே இருக்கும்படி செய்து ஏமாற்றவேண்டும்" என்று புன்சிரிப்புடன், சீமந்தனியின் செவியில் இரகசியமாக, "மாதே! உன் கணவன் இறந்துவிட்டானென்று நினைத்து நீ விசனப்படாதே; அவன் வேறோருலகத்திலிருக்கின்றான்; அவனுக்கு நான் உயிர்த்துணைவன்; அவன் இன்னும் இரண்டு தினங்களில் வந்து உனது துக்கத்தை நீக்குவான்; இவ்விஷயத்தை உனக் கறிவிக்கும் பொருட்டே நான் முன்னே வந்தேன்; இனி நீ உன் மனத்திலிருக்கும் துக் கத்தை ஒழித்துவிடு; நெற்றிக் கண்ணை யுடையவராகிய பரமசிவமூர்த்தியின் ஆணைப்படி அவன் வருவது நிச்சயம்; இந்த இரகசியத்தை நீ எவரிடத்தும் சொல்லாதே; இப் போது என் உயிர்த்துணைவனாகிய அவனுடைய தாய் தந்தையர்க்குத் துன்பம் நேர்ந்திருப்பதாக நான் கேள்விப் பட்டேன்; அத் துன்பத்தை நீக்காவிடில் எனக்குச் சிறப் பில்லை; ஆதலால், அவர்களுடைய மனத் துயரத்தை அகற்றுதற்கு நான் விரைந்து செல்கின்றேன்; நீ சந்தோ ஷத்துட னிருப்பாயாக" என்று சொல்லிவிட்டுக் குதி ரையை நடத்திக்கொண்டு நிடததேசத்தை நோக்கி விரைந்து சென்றான். நாகர் தலைவனும், இராக்ஷதனும் அவன் பின்னே சென்றார்கள்.

அவன் அவ்வாறு சென்றவுடன், சீமந்தனி, அவ

னுடைய வார்த்தைகளால் பலவிதமான சந்தேகங்களைக் கொண்டு, “ இந்தத் தேவகுமாரன் சொன்னவை யெல்லாம் மாயையோ ! அல்லது, நாம் நாயகனை இடைவிடாது சிந்தித்துக்கொண் டிருப்பதால், அந்நினைவே இத்தகைய ஓர் தோற்றத்தையும், வார்த்தைகளையும், செய்கைகளையும் உண்டாக்கி நமக்குக் காண்பித்ததா ! அல்லது இவற்றை யெல்லாம் சொப்பனத்தில் நாம் காண்கின்றேமா ! தூங்குகிறேமா, விழித்திருக்கிறேமா ! விழித்துக்கொண்டு சாக்கிராவஸ்தையில்தானே யிருக்கின்றேம் ; இதோ யமுனை யிருக்கின்றது ; தோழிமார்க ளெல்லாம் பக்கத்தில் நிற்கின்றார்கள் ; நாம் விழித்துக்கொண்டுதா னிருக்கின்றே மென்பது நன்றாக விளங்குகின்றதே ; நாம் தேவகுமாரனைக் கண்டதும் பேசியதும் மெய்தான்; ஆனால், அவன், நம் நாயகர் இரண்டு தினங்களில் வருவா ரென்று கூறியது மெய்யாயிருக்குமா ? இறந்தவர் பிழைத்து வருவா ரென்பதை நாம் எப்படி நம்புவது ? அவன் பொய்வார்த்தை கூறி நம்மை மயக்கி ஒரு வேடிக்கைசெய்து ஏமாற்றிச் சென்றனே ? அவன் வீணாக அப்படி நமக்கு மனக் கலக்கத்தை யுண்டாக்குவதற்கு என்ன காரணம் ? ஒரு சமயம் பரிகாசக்காரனு யிருந்தாலு மிருக்கலாம்; பிறருடைய கஷ்டநஷ்டங்களைக் கவனியாமல் பரிகாசக்காரர்கள் இவ்வாறு வேடிக்கை செய்வது இயற்கைதான் ; என்றலும் அப்படியும் முடிவு செய்வதற்கு ஏதுவில்லாமலிருக்கிறது; ஏனென்றல் அவன் முகத்தில் உண்மைக்குறி விளங்குகின்றது ; அவன் மகா உத்தமனைப்போன் றிருக்கின்றன். அதனல் அவன் கூறியவை அனைத்தும் மெய்யென்றே துணிதற் கிடமிருக்கின்றது ; மேலும் அவனிடத்தில் எனக் கன்புண்டா யிருக்கின்றது ; என் மனமானது என் கணவரிடத்திற் பொருந்துமே யன்றி மற்றையரிடத்திற் பொருந்தாது ;

இன்னும் அவன் கையைத் தொட்டபோதும் எனக் கருவருப்புண்டாகவில்லை; அவனுக்கும் எனக்கும் அதிகரித்த பழக்கமிருந்த ஒரு நினைவும் என் மனதில் உதிக்கின்றது; இவையன்றி, நம் விஷயங்களையும், நம் மாமனார் விஷயங்களையும், பகைவர் விஷயங்களையும் மிக்க சிரத்தையுடன் அவன் கேட்டான்; கேட்டவுடன் துக்கமும் கோபமும் கொண்டான்; நமக்கும் தேறுதல் கூறினான்; முடிவில் தன் நேயனுடைய தாய்தந்தையரது துக்கத்தை நீக்கப்போவதாகவும் கூறிச் சென்றான்; இவற்றை யெல்லாம் நன்றாக ஆலோசிக்குமிடத்து, 'நம் நாயகரே வந்து நடந்தவற்றை யெல்லாம் விசாரித்துணர்ந்து, பின்னால் நம்மைச் சந்தித்து உண்மையை நம்மிடம் உரைக்கலாமென்றும், முதலில் தாய் தந்தையருடைய துயரை நீக்கவேண்டு மென்றும் கருதிப் போய்விட்டார்' என்று துணிய இடமிருக்கின்றது; அவன், தன் நேயனுடைய தாய் தந்தைய ரென்று கூறியது, நம் மாமி மாமனாராகவே யிருக்கலாம்; அப்படியானால், யமுனையில் மூழ்கியிறந்த நம் நாதர் எவ்வாறு இத்தனை வருஷங்கள் சென்று மீண்டு வருதல் கூடும்: ஒரு சமயம் யாக்ஞவர்க்கிய முனிவருடைய பத்தினி மயித்திரை சொல்லிய வார்த்தையை நாம் நம்பி, சைவாகம விதிப்படி, மழுவாயுதமேந்திய பரமசிவக் கடவுளையும், பார்வதி தேவியாரையும் பூஜித்துச் சோமவார விரதம் அனுஷ்டித்து வந்ததன் பயன் நமக்குக் கைகூடியதோ? அல்லது முதல் முதல் என் தந்தையிடம் என்னுடைய சாதகப் பலனைக் கூறிய சோதிடர், 'உமது குமாரத்தி தன் நாயகனுடன் கூடி அநேகம் வருஷங்கள்வரை சுகமாக வாழ்ந்துகொண்டிருப்பாள்' என்றுரைத்த வார்த்தை உண்மையாயிற்றோ? அடியார்க் கெளியராகிய சிவபெருமான் திருவருள் கைகூடுங்

காலம் சமீபித்து விட்டதோ? எல்லாம் வல்ல அந்த இறைவன் செயலை எவரறிவார்!

சிறந்ததிரு வருளுடைய சிவபெருமான் சிந்தித்தால் செல்வமுற்றுத்
துறந்தவரை நிதிக்கிழவ ராக்கிடுவார் துயர்பொருந்தித் தூயஞானம்
மறந்தவரை மதியுடையாராக்கிடுவார் மண்டலத்தில் மயங்கிவீழ்ந்தே
இறந்தவரை யெழுப்பிடுவார் அவர்செயலால் முடியாத தெதுவு
[முண்டோ.

அப்படியே எம்பெருமானுடைய கிருபா கடாக்ஷத்தினால் என் கணவரே மீண்டு வந்திருந்தாலும், தம் தாய் தந்தையருடைய துயர்நீக்க முதலிற் சென்றாலும், அவர், நெடு நாளாக அளவற்ற துயர்க்கடலில் மூழ்கிக் கிடக்கும் நம் துயரம் நீங்கும்படி 'நான்தான் உன் கணவன்' என்று நம்மிடம் ஏன் சொல்லிவிட்டுச் செல்லலாகாது; அந்தோ! இப்பொழுது நிகழ்ந்த காரியங்களால் பலவித குழப்பங்கள் ஏற்படுகின்றனவே யன்றி ஒன்றும் துணியக்கூடவில்லையே; அதனால் என் மனது மிக்க கலக்கத்தை யடைகின்றதே; இதற்கு முன்னுவது நான், நாயகர் பிரிந்து விட்டாரே என்ற ஒரு கலக்கத்தை யடைந்திருந்தேன்; இப்பொழுதோ பல வகையான குழப்பங்களை யடைந்திருக்கின்றேன்; சிவபெருமான் ஏனோ இத்தகைய கலக்கங்களை யெல்லாம் எனக்குண்டாக்குகின்றார்? இனி என்ன நடக்குமோ நானொன்று மறிகிலேனே" என்று வருந்திக் கண்ணீர் விட்டழுதுகொண்டு நின்றாள்.

அவ்வாறு வருந்தி நின்ற சீமந்தனியைத் தோழிகள் பார்த்து, "இவள், இவ்விதம் வருந்துவதற்குக் காரணமென்ன? அந்த இராஜ குமாரன், தன் கையைப் பற்றியதற்குத் துயருறுகின்றாளோ? அல்லது அவன் இரகசியமாக ஏதோ இவள் செவியிற் கூறும்போது இவள் வருந்துவதற்கான வார்த்தைகளைக் கூறி யிருப்பானோ?" என்று

சந்தேகமும் கலக்கமு மடைந்து அவளிடம் விரைந்து போய், "எங்கள் தலைவியே! நீ ஏன் வருந்துகின்றனை? அவன் உன் கையைத் தொட்டதற்காக வருந்துகின்றாயா? அல்லது உனக்கு வருத்தத்தை உண்டாக்கத் தக்க வார்த்தைகளை அவன் கூறிச்சென்றானா? அவன் உன்கையைத் தொடுங் காலத்தில் நாங்கள் வெறுப்படைந்தோம்; எனினும் நீ அதற்காக அருவருப்புக் கொள்ளாதிருந்தபடியால் அதனால் உனக்கேதேனும் நன்மையுண்டாகக் கூடுமென்றும், அது பற்றியே நீ அதற்கு வெறுப்படையாதிருக்கின்றாயென்றும் நினைத்தே நாங்கள் பேசாமலிருந்துவிட்டோம்; உனக்கதில் வெறுப்பிருந்து எங்களுக்கதனை நீ குறிப்பால் விளக்கியிருந்தால் நாங்கள் அப்பொழுதே அவனை விலக்கியிருப்போமே; இன்னும் அவன் நம்மைச் சார்ந்தவனாயிருப்பானென்றும் நினைத்தோம்; இப்பொழுது அந்த நினைப்பு தவறானதென்று விளங்குகின்றது, அவனால் என்ன நிகழ்ந்தது? கூறு" என்றார்கள்.

அதற்குச் சீமந்தனி, "அவனால் ஒரு தோஷமும் உண்டாகவில்லை; அவன், எனக்கு வருத்தமுண்டாகத் தக்க வார்த்தைகளைக் கூறவுமில்லை; அவனுடைய தோற்றத்தையும் செய்கைகளையும் பார்த்தபோதும், வார்த்தைகளைக் கேட்டபோதும், அவன் நம்மைச் சார்ந்தவனென்றும், முன்னே அவனோடு எனக்குப் பழக்க மிருந்ததாகவும் என் மனத்தில் ஓர் எண்ணமுதித்தது; அதனால், 'நம் நாயகரே இந்த வடிவமாக வந்து விட்டாரோ?' என்னும் ஓர் சந்தேகமு முண்டாயிற்று; அதுபற்றியே அவன் கையைப் பற்றியபோது நான் வெறுப்படையாதிருந்தேன்; அவன் அன்னியனைப் போலவே நடித்து, என் நாயகரைப் பற்றிச் சில அனுகூலமான வார்த்தைகளைக்கூறி, 'இவற்றை வேறே யாரிடத்திலும் சொல்லாதே' என்றும் உரைத்துச்

சென்றான். அவன் கூறிச் சென்ற வார்த்தைகளால் என் கணவரைப்பற்றிய நினைவு எனக்கதிகமாக உண்டாகிவிட்டது. மேலும், அவனிடத்திலும் எனக்குப் பக்ஷம் அதிகரித்தது ; என் மனமோ நாயகரிடத்தன்றி வேறு யாரிடத்தும் செல்லமாட்டாது ; அப்படியிருக்க, அவன்மீது என் மனம் சென்றதாலும், அவன் தீண்டியதற்கு அருவருப்புக் கொள்ளாதிருந்தமையாலும் என் நாதரே அந்தத் தேவ குமாரன் வடிவமாக வந்திருப்பாரோ என்னும் துணிவும் என்னிடத்தில் உண்டாயிற்று; அவன் இரகசியமாகக் கூறிய வார்த்தைகளால் அவன் வேறு, என் நாயகர் வேறு என்னும் கருத்தும் விளங்கிற்று ; அந்த வார்த்தைகள் நமக்கனுகூலமானவைகளா யிருந்தாலும், அவற்றை வேறு யாரிடத்திலும் சொல்லக் கூடாதென்று அவன் சொல்லியிருப்பதாலும், அவற்றில் குறிப்பிட்ட காரியம் நடக்குமோ நடக்காதோ வென்னும் சந்தேகம் ஏற்பட்டிருப்பதாலும், அச்செய்கை முடியும் வரையில் அச்சொற்களை நான் உங்களிடம் கூறலாகாது ; ஒரு சமயம் அச்செய்கை நடக்காமற் போகுமாயின், அவ்வார்த்தைகளை நான் இப்போது கூறுவதால் பரிகாசத்திற்கிடமாகும் ; அவ்வாக்கியங்களை உங்களுக்கு நான் பின்னர் தெரிவிக்கிறேன்; இப்பொழுது அத்தேவகுமாரனால் என் நாயகரைப்பற்றிய ஞாபகம் எனக்கதிகரித்தும், இவ்வாறு பலவித சந்தேகங்கள் ஏற்படுவதால் அவருடைய தன்மையைப் பற்றி ஒரு தீர்மானஞ் செய்ய முடியாமல் என் மனம் மிகுந்த குழப்பத்திலிருக்கின்றது; அதனால், 'நம் நாயகரை மீண்டும் அடைவோமோ அடையமாட்டோமோ' என்னும் கவலை எனக்கதிகரித்து விட்டது; அக்கவலையினாலேயே நான் இப்பொழுது துக்கப்பட் டழுதுகொண்டிருக்கிறேன் ; என் தலைவிதி எப்படி யிருக்கின்றதோ தெரியவில்லை" என்று சொன்னாள்.

இவற்றை யெல்லாம் கேட்டவுடனே தோழிகள், "அம்மா! அந்த இராஜ குமாரன் செய்கையைப் பற்றி எங்களுக்கும் பலவித சந்தேகங்கள் ஏற்பட்டிருக்கின்றன; இப்பொழுது உன்னுடைய வார்த்தைகளையும், அவனுடைய செய்கைகளையும் நன்றாக ஆலோசிக்குமிடத்து, அவன், நம் சுற்றத்தைச் சார்ந்தவனாக விருக்கவேண்டும், அல்லது உன் நாயகரே அவன் வடிவமாக வந்திருக்க வேண்டும் என்று யூகிக்க ஏதுவிருக்கின்றது; இவ்விரண்டு அபிப்பிராயங்களில் ஏதேனுமொன்று நிச்சயமா யிருக்கலாம்; இன்றைக்கு நாம் இங்கே புறப்படும்போது நற்சகுனங்களுண்டாயின; அந்த இராஜ குமாரனைச் சந்தித்ததன் மூலம் இன்னும் சில தினங்களில் நமக்கேதேனும் அனுகூலமுண்டாகக் கூடும்; உன் நாயகரே உன்னிடம் வந்து சேர்ந்தாலும் சேருவார்; நீ பூஜித்து வரும் சிவபெருமானும் உமாதேவியாரும் எப்படியும் உன் துயரத்தை ஒழிக்காமலிருக்கமாட்டார்கள்; நீ மனம் வருந்தாமல் சீக்கிரம் ஸ்நானம் செய்துவிட்டு வா; அரண்மனைக்குச் செல்வோம்" என்றார்கள். அதன்மேல் சீமந்தனி மனம் தெளிந்து, தோழியரிடத்தில், "நீங்கள் இங்கு நடந்ததை எவரிடத்தும் சில தினங்கள்வரை சொல்லவேண்டாம்" என்று கூறி விட்டு அவர்களுடன் யமுனையில் இறங்கி விதிப்படி ஸ்நானஞ்செய்து பின்னர்த் தன் மாளிகை போய்ச் சேர்ந்து சிவபூஜையைச் செய்து நிறைவேற்றி அந்தச் சந்திராங்கதன் கூறிச்சென்ற இரண்டு தினங்களும் எப்பொழுது கழியுமோ என்று அதே நினைவுடன் இருந்தாள்.

---

## அத்தியாயம்—6

### சந்திராங்கதன், தாய்தந்தையர் சிறை நீக்கிப் பகைவர் கைவசப்பட்டிருந்த நிடதநாட்டைத் தன் வசப்படுத்தல்.

தனக்குத் துணையாக வந்தவர்களுடன் நிடத நாட்டை நோக்கிச் சென்ற சந்திராங்கதன், குதிரையை விரைவாக நடத்திக்கொண்டு போய் அத்தேசத்தை யடைந்து தோரணங்கள் ஓங்கிய மாவிந்தநகரத்தின் முன்னிருக்கும் ஓர் செழித்த சோலையிலிறங்கி, அதிக தூரம் பிரயாணஞ் செய்த இளைப்பைத் தீர்த்துக்கொண்டு, அதன்மேல் தன்னுடன் வந்த நாக குமாரன் முகத்தை நோக்கி, "நண்பனே ! நான் யமுனைக்கரையில் கண்டு பேசிய பெண்தான் என்னுடைய மனைவி; அவளுடன் வந்தவர்கள் தோழிமார்கள் ; அவர்கள் என்னை உணர்ந்து கொள்ளவில்லை ; அதனால் நான் அவர்களைக் கண்டவுடன், முதலில் அவர்களுக்கு என்வருகையைக்கூறி அவர்களின் துயரத்தை நீக்கக்கருதினேன் ; எனினும், அவர்களிடம் இங்கு நடந்திருக்கும் விசேஷங்களை விசாரித்ததில், என் தாய்தந்தையர் பகைவரால் சிறையி லடைக்கப்பட் டிருக்கின்றார்க ளென்பதும், என் நாடு எதிரிகளின் வசப்பட்டிருக்கின்ற தென்பதும் தெரிந்தன ; ஆதலால் முதலில் பகைவரை யொழித்துத் தந்தைதாய்களின் சிறை நீக்கி நாட்டைக் கைவசப்படுத்தக் கருதி, என் மனைவிக்கு நான்தான் அவள் கணவனென்பதைத் தெரிவித்து அவளைச் சந்தோஷப்படுத்தாமல், பின்னால் அவளைச் சந்திக்கலாமென்று, அவளிடம் வேறு சில தைரிய மொழிகளைக் கூறிவிட்டு இங்கே விரைந்தோடிவந்தேன் ; இதுதான் என்னுடைய நிடததேசம் ; இதோ சமீபத்தில் தெரியும் மாவிந்தமென்னும் நகரந்தான்

எனது இராஜதானிப்பட்டினம்; இங்கேதான் பகைவர் வியாபித்திருக்கின்றார்கள்; ஆதலால் அவர்களைச் சீக்கிரத்தில் நாசஞ்செய்ய வேண்டும்; நீ அந்தப் பகைவரிடம் சென்று, யமுனையாற்றில் வீழ்ந்த நான் பாதாளலோகஞ் சேர்ந்து நாகராஜனால் அபிமானிக்கப்பெற்று, உயர்ந்த வரங்களையும், பலத்தையும், வாகனத்தையும், ஆடையாபரணங்களையும், தக்கதுணையையும் அடைந்து மீண்டும் பூலோகத்துக்கு வந்திருப்பதையும், அவர்கள், என் தாய் தந்தையரின் சிறையை நீக்கி, என்னை வணங்கிக்கொண்டு இந்நாட்டைவிட்டு ஓடாவிடில், என் கைப்படையால் இம்மண்ணுலக வாழ்க்கையைவிட்டு விண்ணுலகடைவார்களென்பதையும் கூறி, அவர்களுக்குப் போர்செய்ய விருப்பமா, ஓடிவிட இஷ்டமா என்பதைத் தெரிந்துவரவேண்டும்; என்னுடைய வல்லமையை அவர்கள் சிறிதும் உணராமல், நான் இறந்துவிட்டேன் என்ற தைரியத்தால், நாகம் இருந்து மறைந்து போனவளையில் எலிகள் துள்ளி விளையாடுவதுபோல என் நாட்டில் வியாபித்து அரசு செலுத்துகின்றார்கள்; அந்த நாகம் மீண்டும் ஒரு சமயம் அவ்வளைக்கு வந்தால் அவ்வெலிகளெல்லாம் எப்படி நடுங்கி யோடிவிடுமோ அப்படியே, என் வருகையைக் கேட்டமாத்திரத்தில் அவ்விரோதிகள் பயந்தோடிப் போவார்கள்; அங்ஙனம் ஓடாமல் எதிர்ப்பார்களாயின் நாம் ஒன்று சேர்ந்து நம்முடைய வாட்படைகளால் அவர்களுடைய தலைகளைப் பனங்காய்கள் தரையில் வீழ்ந்துருளுவதுபோல உருளும்படி வெட்டி வீழ்த்துவோம்" என்றுரைத்தான்.

நாக குமாரன், சந்திராங்கதனுடைய வார்த்தைக்கிணங்கி வீராவேசத்துடன் புறப்பட்டுப்போய் மாவிந்த நகரத்திற்புகுந்து, அங்கே நிர்ப்பயமாயிருந்து அரசுபுரிந்த மன்னரைக் கண்டான். அவர்கள் இவனைக் கண்டதும்,

"நீ யாவன்? எது குறித்திங்கேவந்து எம்மை மதியாமலும், எமக்கு வணக்கம் புரியாமலும் நிற்கின்றனை ; நீ குறித்து வந்த காரியத்தை விரைந்து கூறு ; இல்லையேல் எம்மால் தண்டிக்கப்படுவாய்" என்றார்கள். இந்த வார்த்தைகளைக் கேட்டதும் நாக குமாரன், "அறிவிலிகளே! நீங்களோ என்னைத் தண்டிப்பவர்கள்? உங்களுக்கு மரணம் சமீபித்திருப்பதை முன்னால் அறிவிக்க நான் வந்திருக்கின்றேன்; கேவலமான பறவைகள்போன்ற உங்களுக்கு வைரியாகிய சந்திராங்கதன் இறந்துவிட்டானென்று நீங்கள் நினைத்து யானையிருந்த விடத்தில் முயல்கள் குடியேறியதுபோல் மிக்க தைரியத்துடன் இங்கே வியாபித்திருக்கின்றீர்கள் ; அந்தச் சந்திராங்கதனோ உங்கள் எண்ணப்படி இறந்து போகவில்லை ; நாக ராஜனோடு தோழமை கொண்டு அவனுக்கு விருந்தினனாயிருந்து அவனிடம், அநேகம் வரங்களைப்பெற்று, என்னையும், மற்றோர் இராக்கதனையும் துணை சேர்த்துக்கொண்டு, நீங்கள், இங்கேவந்து அரசு செய்கின்றீர்களென்பதை யுணர்ந்து உங்களை அடியோடொழிப்பதற்கு மிக்க கோபத்துடன் இதோ இந்நகர்ப்புறத்திலுள்ள சோலையில் வந்திருக்கின்றான். அவன், நீங்கள் போர்செய்ய வருகின்றீர்களா? அல்லது ஓடிவிடுகின்றீர்களா? என்பதை அறிந்து வரும்பொருட்டே என்னை உங்களிடம் அனுப்பினான் ; அவனோடு போர்செய்தல் உங்களால் இயலாது ; நீங்கள் எதிர்த்தால் மாண்டொழிவது நிச்சயம் ; ஆதலால் நீங்கள் இந்நாட்டை விட்டோடி விடுங்கள்" என்று சொன்னான்.

பகைமன்னர், நால்வகைப் படைகளை யுடையவர்களாயும், மிகுந்த ஆர்ப்பரிப் புடையவர்களாயு மிருந்தும், முன்னே சந்திராங்காத னிருக்குங் காலத்தில் இயற்கையில் அவனுக்குப் பயந்திருந்தவர்களானதால், அவன் மீண்டும் தக்க

துணையுடன் வந்திருக்கின்றானென்பதைக் கேட்டவுடனே, புலியின் வரவுணர்ந்த ஆடுகளைப்போல திகிற்பட்டு மனங் கலங்கினார்கள்.

" ஒலித்தக்கா லென்னா முவரி எலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும் "

என்றபடி, சமுத்திரம் பெரிய ஒலியைச் செய்துகொண் டிருப்பதால் யாது பயனுண்டாகும்? எதுவு முண்டாகாது. அதைப்போல இப்பகைவர் செய்துகொண்டிருந்த ஆர்ப் பரிப்பெல்லாம் ஒருவகைத் தைரியத்தையு முண்டாக்க வில்லை. அது,தானே ஒடுங்கிப்போயிற்று. எவ்வளவுஎலிகள் கூடி நாகத்தோ டெதிர்த்தாலும் அந்நாகத்தின் மூச்சுக் காற்று வீசிய மாத்திரத்திலேயே அவை இருந்தவிடந் தெரி யாமல்ஓடிவிடும். அவற்றைப்போலவே அங்குச்சேர்ந்திருந்த பகைவர்க ளெல்லோரும் சந்திராங்கதன் சீறிச்சென்றதால் பயந்தோடத் துணிந்தார்கள். அதனால் அவர்கள், இந்திர சேனனையும், அவன் மனைவியையும் சிறை நீக்கிவிட்டு, நாக குமாரனிடத்தில், " நாங்கள் செய்த குற்றத்திற்காகச் சந்தி ராங்கதரிடத்தில் வணங்கி மன்னிப்புக் கேட்டுக்கொண்டு போய்விடுகிறோம் ; நீர் தயவுசெய்து எங்களை அவரிடம் அழைத்துக்கொண்டுபோய் , எங்கள் மீது அவர் அருள் கொள்ளுமாறு அவருடைய கோபத்தைமாற்றி அவரைச் சமாதானப்படுத்த வேண்டும் " என்று கேட்டுக் கொண் டார்கள். அப்படியே நாககுமாரன் அவர்களை அழைத்துக் கொண்டுபோய்ச் சந்திராங்கதனெதிரில் நிறுத்தி அவர்கள், அவனுடைய தாய் தந்தையரைச் சிறையிலிருந்து வெளி யேற்றிவிட்டதையும், அவர்களுடைய அபிப்பிராயத்தையும் தெரிவித்தான். அப்பகைவர்களும், அவனடியில் வீழ்ந்து வணங்கி, " மகாவீரபுருஷரே ! மன்னராய்த் தோன்றிய வர்கள், மறுமன்னர் இளைத்த சமயத்தில் அவர் அரசியலை

அபகரிப்பதும், அவர்மீண்டும் வலிமைப்பெற்றுத் தலை யெடுத்த காலத்தில் அவ்வரசை விட்டோடுதலும் இவ் வுலகத்தியற்கை யாதலின், அதன்படியே நாங்களும் நீர் இங்கில்லாத சமயத்தில் வியாபித்திருந்தோம்; இப்பொழுது நீர் வலிமைபெற்று மீண்டுவந்தவுடன் போர்செய்யும் ஆற்ற லின்றி எம் நாடுபோகத் துணிந்திருக்கின்றோம்; ஆதலின் நீர் கிருபைபுரிந்து நாங்கள் செய்தகுற்றத்தை மன்னித்து, எங்களை வருத்தாமல் எம் மனைவியர் முகத்தில் விழிக்கும் படி அனுப்பிவிடவேண்டும்" என்று கெஞ்சினார்கள். அப் போது அவன் பக்கத்தில் நின்ற நாக குமாரனும், இராக்ஷ தனும், 'பயந்த பகைவரைத் துன்பத்திற்குள்ளாக்காமல் விட்டு விடுவதுதான் யுத்ததர்மம்' என்றார்கள். அதற்குச் சந்திராங்கதன், 'அஃதெனக்குத் தெரியும்' என்று கூறி விட்டுப் பகைவர் முகத்தைப் பக்ஷத்தோடு நோக்கி, "குறும்பர்களே! நீங்கள் செய்தது மிக்க தவறே யெனி னும், இப்போதெனக்கஞ்சியிருப்பதால் உங்களை நான் வருத்தமாட்டேன்;

வஞ்சகப் பகைஞ ரேனும் வன்பிணி யுற்ற போதும்
பஞ்சம்வந் ததனால் நெஞ்சம் பதைத்துயிர் வாடும் போதும்
மிஞ்சிய படைகள் மாய்ந்து மெய்வலி யிழந்த போதும்
அஞ்சிய போதுந் துன்ப மவர்களுக் கியற்றல் தீதே.

என்ற நீதியை நான் அறிவேன்; நீங்கள் இந்த நீதியை நினையாமல் என் தந்தையிளைத்த சமயத்தில் எனது நாட் டைக் கைப்பற்றினீர்கள்; இஃதுங்களுடைய இயற்கைக் குணம்; உங்கள் குற்றத்தை நான் மன்னித்துவிட்டேன்; நீங்கள் உங்களுக்கிஷ்டமான விடத்திற்குச் செல்லுங்கள்" என்று சொன்னான். இந்த அன்பான வார்த்தைகளைக் கேட்டதும் அவர்கள், அவனைப் பன்முறை வணங்கிவிட்டுப் பிழைத்தோம், பிழைத்தோம் என்று ஓடிப்போனார்கள்.

சிறையிலிருந்து வெளிப்பட்ட இந்திரசேனன், நாயகியுடன் அரண்மனையிற்சேர்ந்து, அங்கிருந்த பகை மன்னர்கள் சொல்லாமலோடிவிட்டதை யுணர்ந்து, தன் மந்திரிகளை வரவழைத்து அவர்களிடத்தில், "பகையரசர்கள் என் சிறையை நீக்கிவிட்டு ஓடியதற்குக் காரணமென்ன ?" என்று வினவினன். அப்போது, மாற்றரசரிடத்தில் நாக குமாரன் வந்து பேசியதைக் கேட்டுக்கொண்டிருந்த சிலர், " மன்னர் பெருமானே ! பகைவரிடத்தில் ஒரு வீர புருஷன் வந்து, 'சந்திராங்கதர் நாகராஜன் உதவிபெற்று உங்களை மடிக்க நகர்ப் புறத்திலுள்ள சோலையில் வந்திருக்கின்றார் ; ஆதலால், நீங்கள் உயிர் தப்பி யோடிவிடுங்கள்' என்று சொன்னான். உடனே அவர்கள் மறைந்தோடி விட்டார்கள் " என்றுரைத்தார்கள்.

இந்த வார்த்தைகளைக் கேட்டவுடன், இந்திரசேனன் அளவில்லாத ஆச்சரியத்தையும் ஆனந்தத்தையுமடைந்து, "யமுனையாற்றில் வீழ்ந்து மறைந்த என் புத்திரனே மீண்டு வந்தான்! நான் செய்த தவப்பயன் மிகச் சிறந்ததாய் விட்டது ; இறந்த புத்திரனை நான் மீண்டும் அடைவதென்றால், இதைக்காட்டிலும் அடையவேண்டிய பாக்கியம் வேறென்ன விருக்கின்றது ; உலகத்தில் எப்பொழுதும் நடக்கமுடியாத இச்செய்கை நிகழ்ந்தது சிவபெருமான் திருவருளேயாகும் ; 'தந்தை தளர்ந்த காலத்தில் அச்சோர்வை நீக்கி அவனுக்குச் சௌக்கியத்தை உண்டாக்குவதற்கே புத்திரன் தோன்றுவது' என்னும் பெரியோர் வாக்கியத்தை, என் புதல்வன், எனக்கிப்போது உதவி செய்து உறுதிப்படுத்திவிட்டான் ; நான் அவனை மீண்டும் அடைந்ததால், இழந்த தனக்குவியலைத் திரும்பவும் அடைந்தவன்போல ஆனந்தக் கடலில் மூழ்கினேன் ; விதந்துவாய்க் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த என் மருமக

ளும் துக்கம் நீங்கிச் சுகமெய்துங் காலம் சமீபித்துவிட்டது" என்று, சந்திராங்கதன் வந்த செய்தியைத் தன் மனைவிக்கும் அறிவித்தான். அவள், காணாமற்போன என் தவப்புதல்வனே மீண்டுவந்தான் !" என்று சந்தோஷக் கடலில் மூழ்கினாள்.

அப்பொழுதே இந்திரசேனன், தன் புதல்வன் மீண்டு வந்த செய்தியை நகர மெங்கும் முரசறைந்து தெரிவிக்கும் படிக்கும், நகரத்தையும் அரண்மனையையும் அலங்கரிக்கும் படிக்கும் ஏவலாளர்களுக்குக் கட்டளையிட்டான். அவ்வுத்தரவின்படி, சந்திராங்கதன் செய்தி எங்கும் அறிவிக்கப் பட்டது. நகரமும், அரண்மனையும் அலங்கரிக்கப்பட்டன. இவை நடந்துகொண் டிருக்கும்பொழுதே, இந்திரசேனன், தன் மனைவியுடனும், மந்திரிமார்களுடனும், மற்ற பரிவார ஜனங்களுடனும் புறப்பட்டுச் சந்திராங்கதனை எதிர்கொண் டழைக்கச்சென்றான். நகரத்திலுள்ள எல்லா ஜனங்களுமே, சந்திராங்கதனைப் பார்க்கவேண்டு மென்னும் விருப்பத்தால் உடன் சென்றார்கள். இப்படி இவர்க ளெல்லோரும் போய்ச் சந்திராங்கதன் இறங்கியிருந்த சோலைக்குச் சமீபத்தில் சேர்ந்தபோது, அவனும், தாய் தந்தையரைப் பார்க்கவேண்டு மென்னும் விருப்பத்தால், தன் தோழருடன் குதிரை மீதேறிப் புறப்பட்டுச் சோலையைவிட்டு வெளியேறி நகரத்தை நோக்கிவந்து, எதிரில் வந்த தந்தையையும் தாயையும் பார்த்துக் குதிரையைவிட் டிழிந்து, அடக்க வொண்ணா ஆவலுடன், தாயைக்கண்டு விரைந்தோடும் இளங் கன்றைப்போல வேகமாயோடி, "உங்களைத் துயர்க்கடலில் வீழ்த்தி, யமுனையில் மூழ்கி மறைந்த பாவியேன் மீண்டுவந்தேன்" என்று அவர்களுடைய பாதங்களில் வீழ்ந்து பணிந்து தன் கண்ணீரால் அவற்றைக் கழுவினான். உடனே அவர்கள், அவனைத்

தூக்கி மார்புறவணைத்துக் கண்ணீர் ஆறுய்ப் பெருகி யோட அவன் முகத்தை நோக்கி,

" எங்கள் குலந்தழைக்க இவ்வுலகி லேயுதித்து
மங்கலமாய் வாழ்ந்த மகனே! மகனே! நீ
பொங்குவெள்ள மூழ்கியெங்கோபோய்மறைந்து பொன்றுமல்
இங்கே திரும்பிவந்த தென்புதுமை ! என்புதுமை!
அப்பா அரசேயெம் ஆருயிரே போமுதே
இப்பாரில் நீயிறந்தா யென்றெண்ணி யேயிருந்தோம்
ஒப்பாரு மில்லாத உத்தமனே நீஉயிர்பெற்
றிப்போது மீண்டுவந்த தென்புதுமை ! என்புதுமை !

வல்லமையே மிக்க மகாவீரன் நீபுவியில்
இல்லையென்றே மாற்றரசர் எம்மைத் தளர்வித்துத்
தொல்லைக்குள்ளாக்கினர் நீ தோன்றித்துயர்களைந்திவ்
வெல்லைக்குள் வந்ததெங்கள் ஈடில் தவப்பயனே."

என்று புலம்பினுர்கள். மற்ற ஜனங்களும் துக்கமான வார்த்தைகளைச் சொல்லிக் கண் கலங்கிநின்றுர்கள். அவர்கள் அங்ஙனம் பரிந்தழுவதைப் பார்த்த நாககுமாரனும், இராக்ஷதனும், அவர்களுக்குச் சந்திராங்கதன் மீதிருந்த அன்பைப்பற்றி வியந்து அவர்களும் கண் கலங்கினுர்கள். பின்னர், சந்திராங்கதன், தாய் தந்தையருடைய கண்ணீரைத் துடைத்து, "இவை யெல்லாம் பழவினைப்பயனுல் நடந்தன ; எனினும், சிவபெருமானுடைய திருவருளால் அத்துன்பங்களெல்லாம் நீங்கிவிட்டன ; இனியும் நீங்கள் எதற்காகத் துக்கப்படவேண்டும்? துயரத்தை விடுவீராக" என்று அவர்களுக்குத் தேறுதலான வார்த்தைகளைக் கூறி மற்றவர்களுக்கும் இன் மொழி புகன்று எல்லோருடைய மனக்கவலைகளையும் மாற்றினுன்.

மனத்தெளிவடைந்த இந்திரசேனன், சந்திராங்கதனை நோக்கி, "என் அருமைப் புதல்வனே ! வெள்ளத்தில்

மூழ்கிய நீ எப்படிப் பிழைத்தாய்? இது காறும் எங்குச் சென்றிருந்தனை? எவ்வாறு மீண்டுவந்தனை?" என்று வினவினன். அதற்குச் சந்திராங்கதன், தான் யமுனையில் மூழ்கியது முதல், அச்சோலையில் மீண்டுவந்து சேர்ந்த வரையில் நடந்தவற்றை யெல்லாம் கூறினன். அவற்றைக் கேட்டதும் இந்திரசேனன், "மகனே! உன் மனைவியை வரும்வழியில் கண்டும் எங்கள் துன்பத்தைக் கேட்டதும், அவளுக்குன் வரலாறு கூறி மகிழ்ச்சியை உண்டாக்காமல், எங்களுடைய சிறையை நீக்க இங்கே விரைந்து வந்திருக்கின்றாய்; அதனாலேயே உனக்கு எங்கள் மீதேற்பட்டிருக்கும் அன்பின் மிகுதியானது நன்கு விளங்குகின்றது; இனி நாம் அரண்மனைக்கு விரைந்துசென்று, உன் மனைவி, மாமன், மாமி முதலியவர்களையும் வரவழைத்துச் சந்தோஷப்படுத்த வேண்டும்" என்றான். சந்திராங்கதன், 'அப்படியே செய்வோம்' என்று, நாகராஜன் தனக்குக்கொடுத்த பொருள்களை அவனுக்குக் காட்டினன். அவன் அவற்றைப் பார்த்து அளவில்லா மகிழ்ச்சியடைந்தான். பின் எல்லோரும் புறப்பட்டு மாவிந்த நகரத்தில் பிரவேசித்தார்கள். பற்பல வாத்தியங்கள் முழங்கின; நகரமாந்தர்களெல்லோரும் பூரணகும்பங்களை நிறைத்தும், ஆலத்திசுற்றியும், திருவிழாக் கொண்டாடியும் சந்திராங்கதனுக்குச் சிறப்புச் செய்தார்கள். பலர், சந்திராங்கதனைக் கண்டதும்,

"ஒப்பிலா வீரன் வந்தான் உம்பருக் கிறைவன் வந்தான்
இப்புவி யேந்தல் வந்தான் எங்களின் துணைவன் வந்தான்
தப்பிலா நாகர் போற்றும் சந்திராங் கதனும் வந்தான்
அப்பனின் துயர்களைந்த அன்புடைக் குமரன் வந்தான்."

என்று அவனைக் கொண்டாடினார்கள். இப்படிச் சகலரும் கொண்டாடும்படி சந்திராங்கதன், நகரை வலம்வந்து, சகலருடனும் இராஜ மாளிகை போய்ச் சேர்ந்தான். அரண்

மனையிலுள்ள மாதர்கள், சந்திராங்கதனுக்குத் திருஷ்டி தோஷ பரிகாரஞ் செய்து, பிரயாண இளைப்பு நீங்கும்படி ஸ்நானஞ் செய்வித்து உணவாதிகளை உதவி, அவனை உபசரித்தார்கள். ஆலயங்களில் சிறப்புக்கள் நடைபெற்றன; அந்நகரமெங்கும் ஆனந்தமே பரவி யிருந்தது.

---

## அத்தியாயம்—7

### சந்திராங்கதனுக்கும் சீமந்தனிக்கும் மறுமணம் நிகழ்தல்

இப்படியிருக்க, இந்திரசேனன், சந்திராங்கதன் வந்து விட்ட சந்தோஷ செய்தியைச் சித்திரவருமனுக்குத் தெரிவிக்கும்படி ஒரு திருபமெழுதித் தூதர் கையிற் கொடுத்தனுப்பினன். அவர்கள் விரைந்து போய் ஆரியாவர்த்த நாட்டை யடைந்து அம் மன்னன் கையில் அவ்வோலையைக் கொடுத்தார்கள். சித்திரவருமன் அதனைப் பிரித்து வாசித்ததும், சந்திராங்கதன் வந்துவிட்டா னென்பதை யுணர்ந்து, இழந்த உயிரை மீண்டும் பெற்றவன் போல பெருமகிழ்ச்சி யடைந்து, உடல் சிலிர்த்து, திடுமென உண்டாகிய சந்தோஷத்தினால் ஒன்றும் பேச நாவெழாமல் சிறிதுநேரம் வரை மௌனமாயிருந்து பின்னர், “ஆற்றில் வீழ்ந்து மறைந்த என் மருமகன் மீண்டும் வந்தது அதிசயத்தினும் அதிசயம்! இது சிவபெருமான் திருவுளச் செயலென்றே சொல்லவேண்டும்; என் குமாரத்தி செய்த தவமே தவம்! முதலிற்கூறிய சோதிடர் சொல்லே உண்மையாகி விட்டது; என் தீராத் துயரமுந் தீர்ந்தது” என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டு உடல் பூரித்து, அச் சந்தோஷ செய்தியை அருகிலிருந்த மந்திரியிடம் தெரிவித்தான். அவன் சுவர்க்கலோகத் தின்பம் பெற்றவன் போன்று மகிழ்ந்து, அரசனை நோக்கி, “மன்னர் பெரு

மானே! உம்முடைய தருமமே உமக்கு வந்ததுயரை நீக்கி விட்டது,

புண்ணில் வேல்புகுந் தாலெனத்தீவினை பொருந்திய விதத்தாலே
மண்ணில் வேதனை மிகுதுயர் பற்பல வந்துமா மலைபோல [திட்ட
எண்ணில் லாமலே மானிடர்க் கெய்தினும் இசைந்துமுன் புரிந்
புண்ணி யப்பலன் கூடிய போதவை போய்விடல் இயல்பாமே.

என்றபடி உம்முடைய மனக் கவலைகள் மறையுங் காலம் சமீபித்தபடியால் அவை தாமே யொழிந்தன; நம் சீமந்தனி மிகுந்த சிவபக்தியுடைய மகா பதிவிரதை யாதலின், அவளுடைய மாங்கலியம் நிலைபெற்றது; இனி உமக்கொரு குறையுமில்லை" என்று கூறினன். அதன்மேல் சித்திரவருமன், சுபகரமான அந் நிருபத்தைக் கொண்டுவந்த தூதர்களுக்குச் சிறந்த ஆடையாபரணங்களையும், திரவியத்தையும் நற்பரிசாக அளித்து அவர்களை அனுப்பிவிட்டு, இன்னும் அங்கே நின்றவர்களுக் கெல்லாம் அளவற்ற திரவியங்களை வாரிக்கொடுத்துச் சந்தோஷங் கொண்டாடி, சந்திராங்கதன் செய்தியைச் சீமந்தனியிடம் தெரிவிப்பதற்குப் பிறரை அனுப்பினால், அவர்கள் செல்வதற்குத் தாமதமாகுமென்றும், தானே சென்று அதனைக் கூறி மகிழவேண்டுமென்றும் கருதி உடனே யெழுந்து, உத்தரீயம் சோர விரைந்து சென்று, சீமந்தனியைக் கண்டு புன்முறுவலோடு அவள் முகத்தை நோக்கி, "என் தவப்புதல்வியே! உன் துயரமெல்லாம் நீங்கிற்று; உன் நாயகர் வந்து விட்டார்; உனக்கு மங்கள முண்டாக; நீ என்றும் சுமங்கலியாய் வாழ்வாயாக" என்று சொல்லி, இந்திரசேனனிடமிருந்து நிருபம் வந்த செய்தியையும் தெரிவித்தான்.

அமுதம்போன்ற இந்த வார்த்தை செவிப்புகுந்த மாத்திரத்தில் சீமந்தனி, செல்வத்தை இழந்து மிகுந்த வறுமைக் குள்ளாகித் துயருற்றவர்கள் மீண்டும் அதனைப் பெற்றது

போல் அளவற்ற ஆனந்த மடைந்து, உரோமஞ் சிலிர்க்க உடல் பூரித்து, ஒன்றும் பேசவியலாமல் பிரமித்து, நாக் குளற,

*துன்ப மிகப்பிரிந்த தோன்றலிங்கு வந்தனரோ*
*இன்ப மெனக்களித்த எந்தலுமே வந்தனரோ*
*அன்புநிறை யென்றன் அருங்கணவர் வந்தனரோ*
*என்புதுமை என்தவமே என்றுஞ் சிறந்ததுவே.*

ஆ! ஆ!! உலகத்தில் நானே மிகுந்த பாக்கியசாலி; 'கணவனை யிழந்த எனக்கு இனி இன்புறுங் காலம் எய்துமோ' என்று நான் சந்தேகங் கொண்டிருந்தேன்; அப்படியிருந்த என் துயர் நீங்கி எனக்கு அளவற்ற ஆனந்த முண்டானதற்குக் காரணம் சிவபெருமான் திருவருளே யாகும்; அவருடைய கிருபா கடாக்ஷம் இல்லாவிடின் இயற்கைக்கு விரோதமான இச்செய்கை உலகத்தில் நடைபெற மாட்டாது; நாம் இரண்டு தினங்களுக்கு முன் யமுனைக்கரையில் கண்டு சந்தேகித்த வீர புருஷரே நம் நாயகர்; அவர் தாம், முதலில் தம் தாய் தந்தையருடைய துயரை நீக்கி வரவேண்டுமென்று கருதி, தம்முடைய வரலாற்றை நம்மிடம் கூறாமல், வேறுவகையான சில வார்த்தைகளைக் கூறி நம்மை ஏமாற்றிச் சென்றிருக்கிறார்" என்று உறுதியாகத் தீர்மானித்து, தன் தந்தையை நோக்கி, "அப்பா! தாங்கள் கூறும் இச்செய்தி மெய்தானா? அவர் எப்பொழுது, எப்படி, எங்கிருந்து, என்றைக்கு வந்து சேர்ந்தார்?" என்று வினவினாள். அதற்குச் சித்திரவருமன், "என் தவப்புதல்வியே! அவர் ஆற்றில் மூழ்கியபோது தெய்வச் செயலால் உயிர் நீங்காமல் நாகலோகஞ்சேர்ந்து, சர்ப்பராஜனால் இதுவரை உபசரிக்கப் பெற்றிருந்து, இப்போது அவனிடம் சிறந்த பொருள்களும் துணையும் பெற்றுத் திரும்பிவந்து நிடத நாட்டில் சேர்ந்திருக்கின்றனராம்; திரும்பி வருங்

காலத்தில் இரண்டு தினங்களுக்கு முன் உன்னையும் பார்த்து உன்னிடம் சில வார்த்தைகளும் பேசிச் சென்றனராம்; இவ் விவரங்களெல்லாம் இந்திரசேனரிடமிருந்து வந்த நிரூபத்தில் விளக்கமாக எழுதப்பட்டிருக்கின்றன; நீ அவரைப் பார்த்திருந்தும் அவ் விஷயத்தை ஏன் என்னிடம் தெரிவிக்காம லிருந்தனை ?" என்று கேட்டான். அப்போது சீமந்தனி அதிசயம் விளங்கும் முகக் குறிப்புடன் தன் பக்கத்தில் நின்ற தோழியர் முகத்தை நோக்கி, "தோழிகளே! நம்முடைய சந்தேகம் தெளிவாகிவிட்டது; தேவகுமாரன் வடிவத்தோடு அன்றைக்கு நம்மிடம் வந்து சென்றவரே என் நாயகர்" என்று புன்சிரிப்போடு கூறிவிட்டுச் சித்திர வருமனைப் பார்த்து, "தந்தையே! இரண்டு தினங்களுக்கு முன் நானும் தோழிகளும் யமுனைக்கு நீராடச் சென்ற போது ஒரு வீரபுருஷர் குதிரைமீதேறி இரண்டு துணைவருடன் வரக்கண்டோம்; அவரைக் கண்டதும், எனக்கவர் மீது அன்புண்டாயிற்று; அவருடைய வரலாற்றைத் தோழிகள் அவரிடம் விசாரித்தார்கள்; அவர், தம்மை ஒரு தேவகுமாரனென்று அவர்களிடம் தெரிவித்து விட்டு என் சமீபத்தில் வந்து என்னுடைய விருத்தாந்தங்களை விசாரித்தார்; நான் எனது சரித்திரத்தைக் கூறினேன். அதன்மேல் அவர் என் கரத்தைப் பற்றிக் கொண்டு, "பெண்ணே! உன் கணவன் உயிருடன் இருக்கின்றான்; நான் அவனுக்குத் தோழன்; இன்னும் இரண்டு தினங்களில் அவன் உன்னிடம் வருவான்; அவனுடைய தாய் தந்தையர் மிகுந்த துயர்க்குள்ளாகி யிருப்பதால் நான் இப்போது அவர்களுடைய துன்பத்தை நீக்கச் செல்கின்றேன்; உன் கணவன் வரும் சந்தோஷ செய்தியைத் தெரிவிப்பதற்கே நான் உன்னிடம் வந்தேன்" என்று என்னிடம் கூறிப் போய் விட்டார். அவருடைய செய்கைகளையும், உருவத்

தையும் பார்த்து, 'அவர் என் நாயகராகவே யிருப்பாரோ' என்று நானும், தோழிகளும் பலவாறு சந்தேகமும், பயமும், நாணமும், மனக்கலக்கமுங் கொண்டு வந்து விட்டோம் ; அவருடைய விஷயத்தை உறுதியாகத் தெரிந்து கொள்ளுமுன் தங்களிடம் தெரிவிக்கக் கூடாதென்றும், அவர், என் நாயகர் இரண்டு தினங்களில் வருவாரென்று சொல்லிய வார்த்தையின்படி, வருவதையும் வராததையும் தெரிந்து கொண்டு அதன்மேல் நடந்ததைக் கூறலாமென்றும் பேசாமலிருந்துவிட்டோம் ; இப்போது அவர் சொற்படியே என் காதலரின் வரவை உணர்ந்து கொண்டோம் ; மேலும் நீர் கூறிய விஷயங்களால் அன்று வந்து போனவரே என் கணவரென்பதும் விளங்குகிறது ; அப்பா ! இப்படி நேருமென்று நான் நினைக்கவேயில்லை; எல்லாம் சிவன்செயல் " என்று சிவபெருமானையும், உமாதேவியாரையும் துதித்தாள் ; வணங்கினாள்.

அதன்மேல் சித்திரவருமன் ஆனந்தக் கண்ணீர் சொரிய அவளைப் பார்த்து, "என் செல்வப் புதல்வியே ! நீ அன்றைக்கு மடிந்து போகத் துணிந்தனையே ; அப்படி இறந்திருந்தால் இப்போது ஒரு பயனுமில்லாமற் போய் விடும்; திரும்பி வந்த உன் கணவரும் விசனத்தால் மடிவர்; அவ்வாறின்றிப் பொறுமையோடிருந்ததனால் நீ இப்போது பெரிய வாழ்வை அடைந்தாய்; பொறுமையால் எப்பொழுதும் நன்மையே விளையும் ; அதுபற்றியே பெரியோர்கள், பொறுமையைச் சிறப்பித்துக் கூறி யிருக்கின்றனர் ; 'பொறுத்தார் அரசாள்வர், பொங்கினர் காடுறைவார்' என்ற பழமொழி இங்கு ஆராயத் தக்கதா யிருக்கின்றது ; இனி, நீ, நீண்டகாலம் சுகமுற்றிருப்பாய்; சோமவார விரத பலன் இத்தகைய தென்பதை நான் இப்பொழுதுதான் உணர்ந்தேன்; அவ்விரத மகிமையே உன்நாயகனை மீண்டும்

கொண்டுவந்து சேர்த்திருக்கின்றது; அது மங்கலிய மிழந்த ஒருத்தியை இவ்வாறு மீண்டும் சுமங்கலியாகச் செய்யக் கூடிய சக்தி வாய்ந்ததா யிருக்குமெனில், அதன் மகிமையை எவரால் அளவிட்டுச் சொல்லுதல் இயலும்! மேலும் உனக்கு ஜாதகங் கணித்த இருவருள் முதலிற் கூறியவரே நுட்பமான ஆராய்ச்சி யுடையவர்; அவர் சொன்ன பலனே இப்பொழுது நடைபெற்றிருக்கின்றது" என்று சந்தோஷமான வார்த்தைகளைப் பேசி உடனே அந்தச் சோதிடரை வரவழைத்து அவருக்கு அளவற்ற திரவியங் களை நற்பரிசளித்து அந்தப்புரத்திலுள்ள மற்ற ஸ்திரீகளுக் கும் இச் சந்தோஷ செய்தியைத் தெரிவித்தான். துக்க சாகரத்தில் மூழ்கிக்கிடந்த சீமந்தனியின் தாயும், மற்றவர் களும் விரைந்தோடி வந்து சீமந்தனியைக் கண்டு மகிழ்ச்சி யுற்ற வார்த்தைகளைப் பேசி அவளை வாழ்த்தினார்கள். அரண்மனை யெங்கும் ஆனந்தமே பரவியிருந்தது.

பிறகு சித்திரவருமன், மருமகன் வந்த செய்தியை, ஏவலர்களால், நகரெங்கும் பறைசாற்றி அறிவிக்கச்செய்து, தேவாலயங்களுக்குச் சிறப்பியற்றிப் பற்பல தானதர்மங் களைச் செய்து, சீமந்தனியை அலங்கரிக்கும்படி தாதிகளுக் குக் கட்டளையிட்டான். அவர்கள், அழுக்கடைந்த மாணிக் கத்தைக் கழுவியதுபோல, மாசடைந்த திருமேனியை யுடைய சீமந்தனிக்குப் பரிசுத்த ஜலத்தால் ஸ்நானஞ் செய்வித்து, பாலின் புகைபோன்ற அழகிய வஸ்திர மணிந்து, வாசனை யுள்ள மலர்களைக் கூந்தலிற் சூடி, நெற்றி யிற் குங்குமமிட்டு, தேகத்திற் சந்தனக்குழம்பு பூசி, விலை யுயர்ந்த பொன்னாபரணங்களையும், இரத்தினாபரணங்களை யும் பூட்டி அவளை இலக்குமிபோல அலங்கரித்தார்கள். சீமந்தனி அப்பொழுது புதுமணப் பெண்போல விளங்கி னாள். அவளுடைய முகம் அன்றலர்ந்த செந்தாமரை,

மலர்போல் பிரகாசித்தது. அரசன் பறைசாற்றுவித்ததன் மூலம் சந்திராங்கதன் வரவுணர்ந்த அந்நகரமாந்தர்களெல்லோரும் தங்கள் தங்கள் மாளிகைகளை அலங்கரித்து ஆனந்தங்கொண்டாடினார்கள். அந்நகரம் இந்திரபுரிபோல சந்தோஷ மயமாகப் பிரகாசித்தது.

அதன்மேல் சித்திரவருமன் தன் புத்திரியுடன் நிடத நாட்டிற்குச் சென்று மருமகனைப் பார்க்க விரும்பி, பிரயாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யும்படி மந்திரிக்குக் கட்டளையிட்டான். உடனே மந்திரி அதற்குரிய காரியங்களைச்செய்தான். நகரத்தில் பிரயாணபேரிகை அறையப்பட்டது. நால்வகைப்படைகளும் பிரயாணக்கோலத்துடன் அரண்மனையின் வாயிலில்வந்து கூடின. நகரமாந்தர்களிற் பலரும் பிரயாணத்திற்கு ஒருப்பட்டு நின்றார்கள். நல்ல நேரத்தில் சித்திரவருமன், சீமந்தனியையும், மற்ற அந்தப்புர ஸ்திரீகளையும் சிறந்த குதிரைகள் பூட்டிய இரதத்திலேற்றி அழைத்துக்கொண்டு, இராஜ குடும்பத்தைச் சார்ந்த வீரர்களும், மந்திரி பிரதானிகளும், சேனைத் தலைவர்களும், நால்வகைச் சேனைகளும் புடைசூழ, மங்கள வாத்தியங்கள் முழங்கப் புறப்பட்டு விரைவில் பிரயாணஞ் செய்து, நெடிய மார்க்கத்தைக் கடந்து நிடதநாட்டையடைந்து, மாவிந்த நகரத்தின் சமீபத்திலுள்ள சோலையில் இறங்கி இருந்துகொண்டு, தான் வந்திருக்கும் செய்தியைத் தெரிவித்து வரும்படி இந்திரசேனனிடம் தூதுவரை அனுப்பினான். அவர்கள் சென்று சமாச்சாரம் தெரிவித்தவுடனே இந்திரசேனன் மகிழ்ச்சியடைந்து, மந்திரிகளுடன் அச்சோலைக்குப் போய்ச் சித்திரவருமனை எதிர்கொண்டு தழுவி அழைத்து வந்தான். எல்லோரும் அளவற்ற ஆனந்தத்துடன் நகரத்திற் பிரவேசித்து அரண்மனையிற் புகுந்தார்கள்.

அவ்வாறு சேர்ந்த மாத்திரத்தில், சந்திராங்கதன், கண்ணி ரொழுகிய முகத்தோடு விரைந்தோடி வந்து, "உங்களுக் கெல்லாம் மிகுந்த மனத்துயரை விளைவித்துச் சென்ற மாபாவி மீண்டும் வந்தேன்" என்று சொல்லிக் கொண்டே மாமனார் மாமியார் பாதங்களில் சாஷ்டாங்க மாக வீழ்ந்து வணங்கினான். சித்திரவருமனும் துக்கம் சகிக் காமல், கண்ணீர் ஒழுகச் சந்திராங்கதனை வாரியெடுத்து மார்புறத் தழுவிக்கொண்டு, "மருமகனே! கெட்ட காலத் தால் நமக்குள் பிரிவுநேர்ந்தது; எனினும் சிவனருளால் மீண்டும் நாம் ஒன்று சேர்ந்தோம்; இனி எதற்காகத் துக் கப்பட வேண்டும்? துயரத்தை விடுவீராக" என்று அவனுக் குத் தேறுதல் கூறினான். இதற்குள் தன் நாயகனை நேரில் பார்த்த சீமந்தனி அடக்கமுடியாத துயரத்தோடு ஓடிவந்து அடியற்ற மரம்போல் அவனுடைய பாதங்களில் வீழ்ந்து.

"மண்ணிற் பெருந்துயர மாக்கடலில் நான்மூழ்கிக்
கண்ணீர் வடித்துக் கலங்கிமிக வேகதறத்
தண்ணீரில் மூழ்கித் தனிப்பிரிந்த நாதமனம்
புண்ணாகு மென்துயரம் போக்கவின்று வந்தீரோ.

பந்துக்கள் கூடிப் பரிந்தழவே வெள்ளத்தில்
மூந்திக் குளித்த முழுமதியம் போன்முகத்தீர்
இந்த வுலகதனில் எங்கள்துயர் போக்குதற்குச்
சிந்தித்து மீண்டுவந்து சேர்ந்தீரோ செவ்வியரே.

நாதன் றனைப்பிரிந்தும் நல்லுயிரைப் போக்காமல்
ஏதமுற மண்ணில் இதுவரையி லேயிருந்த
பாதகியா மென்றனையும் பார்ப்பதற்கு வந்தீரோ
காதலரே மாநிடதங் காக்குமுயர் காவலரே."

என்று கண்ணீர் ஆறுய்ப் பெருகியோடக் கதறினாள். சந்திராங்கதனுடைய கண்களிலிருந்தும் முத்துக்கள் உதிர் வதுபோல் கண்ணீர்த் துளிகள் சிந்தின. இவர்கள் துக்

கத்தைப்பார்த்து அங்கு நின்றவர்க ளெல்லோரும் கண் கலங்கினர்கள். நெடுநாட்கள் பிரிந்திருந்த ஒருவரை யொரு வர் சந்திக்கும்போது சந்தோஷ மடைய வேண்டியது இயற்கை யெனினும், திடீரென்று பார்த்தவுடனே முன் பிரிவால் நேர்ந்த துக்கம் அவர்களிடம் முதலில் அதிகரித் தடங்கிப் பின்னர் சந்தோஷமுண்டாவது வழக்கமாதலின், இவ்வாறு சந்திராங்கதனைப்பார்த்தவுடன் ஒவ்வொருவரும் துக்கத்தையே அடைந்தார்கள்.

பின்னர், சந்திராங்கதன், தன்னடியில் வீழ்ந்து புலம்பிய சீமந்தனியைத் தூக்கி நிறுத்திக் கண்ணீரைத்துடைத்து அவளுடைய முகத்தைப் பார்த்து, "என் அருயிர்த் துணைவியே! நான் ஆதியில் உன் சொல்லைத் தடுத்துச் சென்றதனலேயே நமக்கு இத்துயரம் நேர்ந்தது; அவ்வாறு செய்யும்படி கெட்டவிதியானது என்னைத் தூண்டியது; விதியை விலக்கல் எவராலாகும்; பழவினைப்பயனல் சிறிது காலம் நாம் பிரிந்து துன்பத்தை அனுபவித்தோம்; எனி னும் அது நீங்குங்காலம் ஏற்பட்டுவிட்டது; இனி நமக்கு எத்துயரமும் நேராது; நம் வாழ்க்கை இனிதாக நடை பெறும்; நீ விசனத்தை ஒழிப்பாயாக" என்று தேறுத லான வார்த்தைகளைக் கூறினன். அவற்றைக் கேட்ட மாத்திரத்தில், சர்ப்பத்தின் கொடிய விஷமானது, சிறந்த மந்திரமொழிகள் வெளிப்பட்டபோது எப்படி யிறங்கி விடுமோ அப்படியே சீமந்தனியின் துயரம் முற்றும் நீங்கி விட்டது. அதன்மேல் அவள் மலர்ந்த முகத்தோடு தன் கணவனை நோக்கி, "என் உயிர்க்காதலரே! நடந்தவை போகட்டும்; நானே உம்முடைய பிரிவால் மிகுந்த துயர்க் கடலில் மூழ்கி முதலில் உயிர்விடத் துணிந்தேன்; அப் போது என் தந்தை, 'உயிர்விடுவது தக்கதன்று; பின்னொரு காலத்தில் நீ நாயகனை அடைந்தாலும் அடையக் கூடும்;

ஆதலால் சிறிது காலம் பொறுமையோடிருப்பது நல்லது' என்று என்னைத் தடுத்தபடியால், நான் கஷ்டங்களைத் தாங்கிக்கொண்டு இதுவரை சாகாமல் உயிர்வைத்திருந்தேன்; அவர் சொன்னபடியே தெய்வச் செயலால் நீர் திரும்பிவந்தும், நான் மிகுந்த துயர்க்குள்ளாகி யிருப்பதை உணர்ந்தும், சில தினங்களுக்கு முன், முதன் முதல் என்னைச் சந்தித்தபோது, உம்முடைய உண்மையான வரலாற்றைக் கூறி என்னுடைய துயரத்தை நீக்காமல் பொய்ம்மொழி புகன்று என்னை ஏமாற்றிவிட்டு இங்கே வந்ததற்குக் காரணமென்ன? அப்படி நீர் என்மீது அன்பு செலுத்தத் தக்க புண்ணியத்தை நான் செய்யவில்லையா? நான் மேன்மேலும் பற்பல சந்தேகங்களைக்கொண்டு துயரத்தையடையும்படிக்கும், என்தோழிகளும் நானும் அருவருப்புக்கொள்ளும்படிக்கும் நீர் என் கரத்தைப் பிடித்துக்கொண்டு ஏதேதோ கூறி எங்களை மயங்கவிட்டு வந்தது நியாயமாகுமா?'' என்று வினவினாள்.

அதற்குச் சந்திராங்கதன், "கண்மணி! நான் உன் துயரத்தை உணராமலும், உன்மீது அன்பில்லாமலும் வந்துவிடவில்லை; முதலில் உன்னைக்கண்டு உன்னுடைய துயரத்தை நீக்கக் கருதியே யமுனைக்கரை வந்தடைந்தேன்; வந்ததும் நற்காலத்தால் உன்னையும் கண்டேன்; கண்டவுடன், உன் தோழியரால் என் தந்தை தாயர்க்கு நேர்ந்திருக்கும் கஷ்டங்களையும், என் நாட்டைப் பகைவர் கைப்பற்றி யிருப்பதையும் கேள்விப்பட்டேன். உடனே என் மனத்தில் சில எண்ணங்கள் உதித்தன; அவற்றால் நான் தாமதிக்காமல் இங்கே புறப்பட்டுவரத் துணிந்தேன். எவ்வாறெனில், 'தாய் தந்தையர், பசுக்கள், சிசுக்கள், அந்தணர், ஆசாரியர், பெரியோர் முதலியவர்களுக்கும், தன் நாட்டிற்கும் துன்பம் நேர்ந்திருக்கும்போது அத்

துயரை நீக்காமல் வேறு காரியத்தில் பிரவேசிப்பவன் மகா பாதகனுவான்' என்று சாஸ்திரங்கள்கூறுவதால், என்தாய் தந்தையரும், நாடும் பிறர்கைவசப்பட்டிருப்பதை உணர்ந்த நான் உடனே இங்குவந்து பகைவரை ஒழிக்கா விட்டால் எனக்கு மிகுந்த பாதகமாகும்; சிறப்புமில்லை; நான் புருஷரிற் பேடியுமாவேன்; மேலும் நான் எவ்வளவு வீர புருஷனுய் நாகலோகஞ் சென்று, சர்ப்பராஜனுல் நன்கு மதிக்கப் பெற்றுத் தக்க துணையுடன் வந்திருந்தாலும், என் நாடும், செல்வமும், சுற்றமும், பகைவர் கைப்பற்ற, ஐசுவரியமிழந் தவனுயிருப்பதனுல், அந் நிலைமையோடு மாமன் வீடுபுகுந் தால் என்னை எவரும் மதிக்கமாட்டார்; நீயும் மகா உத்தமியாயிருந்தபோதிலும் கூட அந் நிலைமையை உத்தேசித்து என்மீது பக்ஷங்குறைந்தவளா யிருப்பாய்;

' கல்லானே யானுலும் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாரும் சென்றங் கெதிர்கொள்வார்—இல்லானை
இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லா தவன்வாயிற் சொல்.'

என்றபடி, கைப்பொரு ளில்லாதவனை எல்லோரும் இகழ்வது இவ்வுலகத் தியற்கை. ஆதலின், இந்நீதிக ளெல்லாம் என் நினைவிற்கு வந்தன. அதனுல், நான், 'முதலில் நிடத நாட்டிற்குச்சென்று, தாய் தந்தையர் சிறை நீக்கி, நாட்டையும் கைவசப்படுத்திக்கொண்டு திரும்பி உன்னிடம்வரலாம்' என்று உறுதிகொண்டு உனக்கும் சிறிது விசனம் நீங்கும் படியான தைரிய வார்த்தைகளைக் கூறிவிட்டு இங்கே விரைந்தோடி வந்தேன். வந்ததும் எண்ணிய காரியங்களை யெல்லாம் முடித்து விட்டு, உன் தந்தையின் நகரத்திற்கு வரப் புறப்பட்டேன்; அதற்குள் என் தந்தை, என் விஷயத்தைக் குறித்து நிருபமெழுதி உன் தந்தைக்கனுப்பிய படியால் நீங்களெல்லாரும் இங்கே வந்துவிடுவீர்களென்று

என் பிரயாணத்தை நிறுத்திக்கொண்டேன்; நீங்களும் வந்து விட்டீர்கள்; இனி நாம் கவலையடைய வேண்டிய அவசியமில்லை'' என்று சொன்னான். இவற்றை யெல்லாம் கேட்டுச் சீமந்தனி, "நீர் அப்படியே இங்கு வரவேண்டியது அவசியமா யிருந்தாலும், நீர்தாம் என்னுடைய நாயகரென்பதை எனக்குக் கூறிச் சந்தோஷத்தை உண்டாக்கி விட்டு வந்திருந்தால் நான் எவ்வளவோ திருப்தியடைந்திருப்பேனே; அதைக்கூட நீர் செய்யாமல் வந்துவிட்டது தான் எனக்கு மிகுந்த துயரத்தை உண்டாக்கி விட்டது'' என்றாள். அதற்குச் சந்திராங்கதன், "காதலி! நான் அப்படியே செய்து வந்திருப்பேன்; ஆனால், அதிலும் ஒரு சங்கடமிருந்தது; அஃதியாதெனில், நான் இன்னானென்பதை உனக்கறிவித்து விட்டால், நீ அரண்மனைக்கு வந்து போகலாமென்று என்னை வற்புறுத்துவாய்; நான் உன் சொல்லைத் தட்டாமல் அங்கு வந்தே தீரவேண்டும்; அப்படி வந்தால் அங்குள்ள சுற்றத்தார்கள் கூடி என் வரலாறுகளை விசாரித்து என்னை உபசரிக்கத் தலைப்படுவார்கள்; அதனால் சில தினங்கள் கழிந்து நான் உத்தேசித்த காரியத்தை நிறைவேற்றுதற்குத் தாமதமாகி விடும்; அதை உத்தேசித்துத்தான் நான் அக்காரியத்தையும் செய்யாமல் வந்து விட்டேன்; உலகத்தில் அறிவீனர்கள் தாம் பின் உண்டாகும் அவமதிப்பை நினையாமல், முதலிற்கிடைக்கும் உபசரிப்பையே பெரிதாக நினைத்து, 'மாமியார் வீடு கைலாசம்' என்னும் தீர்மானமுடையவர்களாய், மற்ற காரியங்களை யெல்லாம் கவனிக்காமல் மாமன் வீட்டிற் சேர்ந்து சந்தோஷத்தை அனுபவித்துப் பிற்பட்ட காலத்தில் தீராத்துயரத்தையும், மாறா அவமதிப்பையும் அடைவார்கள்; என்னைப் போன்ற புத்திமான்கள் அவ்வாறு இழிவை அடையமாட்டார்க''ள் என்று சொன்னான்.

இவற்றை யெல்லாம் கேட்ட பின், அங்கு நின்றவர்க ளெல்லோரும், சந்திராங்கதனுடைய புத்தியையும் செய்கை யையும் பற்றி வியந்து பேசினார்கள். சித்திரவருமன், சந்தி ராங்கதனைப் பார்த்து, "மருகரே! நீர் கூறியவைகளெல் லாம் உலகத்தில் இயற்கையாக நடக்கக் கூடியவைகளெனி னும், மனிதர்கள் தன்மைகளைப் பொறுத்து அவை அப் படியே நடப்பது முண்டு, மாறுபட்டு நடப்பது முண்டு; ஒரு தொழிலும் செய்ய வன்மையில்லாதவனும், விவேக மற்றவனுமாகிய ஒருவன் மாமனார் வீட்டிற் சேர்ந்து அவர்கள் செல்வத்தை அனுபவித்து அழிக்கத்தொடங்கு வானாயின் அவனை அங்குள்ள எல்லோரும் நிந்தித்தல் இயல்பு; சகல விஷயங்களிலும் வெற்றி பெறக் கூடிய புத்தி நுட்பமும், மாமனார் வீட்டுச் செல்வத்தை விருத்தி செய்யக்கூடிய இயல்பும் பொருந்திய மருமகன் மாமனார் வீட்டிற் சேர்ந்து, சிறப்புடனிருந்தாலும், தரித்திர நிலையி லிருந்தாலும் எல்லோரும் அவனைக் கொண்டாடுவார்கள்; நீரோ என் குடும்பத்தையும், உமது தந்தை குடும்பத்தை யும் ஆதரிக்கக் கூடிய ஆற்றல் மிகுந்தவர்; நீர் இல்லாமையி னாலேயே பகைவர் உமது தந்தை இராஜ்ஜியத்தைக் கைக் கொண்டனர்; நான், அவருக்குத் துணைசெய்யும் ஆற்ற லில்லாதவனானபடியால், 'நம்முடைய மருகர் மீண்டும் வந்து நம் துயரங்களைப் போக்கமாட்டாரா' என்னும் ஏக்கத்துடனிருந்தேன்; அப்படியிருந்த நான், எனக்காதார மாகிய நீர் என்னிலையில் வரினும் உம்மை அவமதிப்பேனா? இதை நீர் சிறிதும் நினைக்காமல் உலக இயலைப் பொது வாகத்தழுவி நடந்திருக்கின்றீர்; இஃது உம்மைப்போன்ற புத்திமான்களுக்குரியதுதான்; எப்படி யிருந்தபோதிலும் உம்முடை விவேகம் பொருந்திய செய்கைகளை நினைத்து நினைத்து நான் மகிழ்கின்றேன்" என்று உபசார வார்த்

தைகள் கூறி மேலும், அவன் யமுனையில் மூழ்கியது முதல், நிடததேசம் வந்து சேர்ந்தவரை நடந்த சரித்திரங்களைக் கூறும்படி அவனிடம் கேட்டுக்கொண்டான். அவ்வாறே சந்திராங்கதன் சகல விருத்தாந்தங்களையுங்கூறி, நாகராஜன் தனக்குக் கொடுத்த பொருள்களை எல்லோருக்குங் காட்டிச் சீமந்தனியிடம் கொடுத்தான். சீமந்தனியும் மற்றவர்களும், "நல்விதி ஏற்பட்டிருந்ததனாலேயே இத்தகைய காரியங்களெல்லாம் நிகழ்ந்திருக்கின்றன ; எல்லாம் சிவபெருமான் செயல்" என்று மகிழ்ந்து பலவாறு அவரைப் புகழ்ந்தார்கள்.

அதன்மேல், இந்திரசேனன், தன்னுடைய சம்பந்திகளுக்கும், மற்றவர்களுக்கும் உயர்ந்த விருந்து செய்தான். எல்லோரும் விருந்துண்டு களித்துச் சில தினங்கள் வரை அங்கே தங்கி யிருந்தார்கள். அரண்மனையில் பாட்டுக்கச்சேரி, வித்வப் பிரசங்கம், விகடம் முதலிய சந்தோஷ காரியங்கள் நடந்து கொண்டிருந்தன. அப்படி யிருக்குங் காலத்தில், இந்திரசேனன், சித்திரவருமனை நோக்கி, "மைத்துனரே ! நமக்குச் சிறிது காலத்திற்கு முன் சில கஷ்டங்கள் ஏற்பட்டிருந்தும் அவையாவும் அரன் கிருபையால் அகன்றொழிந்தன. இப்போது நாமெல்லோரும் சந்தோஷக்கடலில் மூழ்கி யிருக்கின்றோம். இனி நமக்கொரு குறைவுமில்லை. சந்திராங்கதனும் சீமந்தனியும் இனிது வாழ்ந்திருப்பார்கள். எனினும் இன்னும் சில காரியங்கள் நிறைவேறாமலிருக்கின்றன; அவை முடியாமலிருப்பது ஒரு குறையாயிருக்கின்றது; அவைகளையும் நாம் முடித்துவிட்டால் நம் மனம் திருப்தியடையும்" என்றான். அதற்குச் சித்திரவருமன், "என்ன காரியங்கள் எஞ்சி நிற்கின்றன?" என்றான். இந்திரசேனன், "சந்திராங்கதனுக்கும், சீமந்தனிக்கும் முந்தியே மணம் முடிந்திருக்கின்றது; எனினும்,

சந்திராங்கதன் ஆற்றில் வீழ்ந்திறந்தானென்ற பிரஸ்தாபம் எங்கும் பரவி யிருப்பதாலும், சீமந்தனி திருமங்கலி யத்தை அகற்றிவிட்டு இதுவரை கைம்மை விரதம் அனுஷ்டித்து வந்திருப்பதாலும், உலகத்தில் பெரும் பான்மை யான ஜனங்கள், சந்திராங்கதன் திரும்பி வந்ததை யுணராமல் இறந்து விட்டானென்றே நினைத்திருப்பார்கள்; அந்த அபிப்பிராயம் நீங்கும் பொருட்டும், சந்திராங்கதன் மீண்டு வந்த செய்தி எங்கும் தெரியும் பொருட்டும், அவனுக்கும் சீமந்தனிக்கும் மறு விவாகம் நடத்திவிடவேண்டும்; மேலும் ஆற்றில் வீழ்ந்த சந்திராங்கதன் வேற்றுலகம் புகுந்து மீண்டு வந்ததால், முந்தின பிறப்பை யொழித்து வேறொரு பிறப்பை யடைந்தவன்போ லாய்விட்டான். அவன் மறைந்தவுடன் மங்கலிய மிழந்த சீமந்தனி, இப்போது அந்நிலைமை மாறிக் கன்னிகை போன்று விளங்குவதால் அவளும் மறு பிறப்படைந்தவள் போலாய்விட்டாள். இந்த நியாயத்தைக் கொண்டும் மறு விவாகம் நடத்தவேண்டியது அவசியமாயிருக்கின்றது. ஆதலால் இந்தக் கலியாணத்தை நிறைவேற்றிச் சந்திராங்கதனுக்கு இராஜ்ஜிய பட்டாபிஷேகமும் செய்து விடவேண்டும்" என்று சொன்னான். சித்திரவருமன், அவனுடைய அபிப்பிராயத்திற் கிசைந்தான்.

அதன்மேல் அவ்விருவரும், சிறந்த சோதிடர்களைக் கொண்டு திருமணத்திற்குரிய நாளை நிச்சயித்து, சந்திராங்கதன் திரும்பி வந்த செய்தியையும், அவனுக்கும் சீமந்தனிக்கும் மேற்குறித்த தினத்தில் மறு மணம் நடக்கப்போவதையும் திருமணவோலைகளில் எழுதி அவற்றைப் பற்பல தேசங்களிலுள்ள அரசர்கட்கும், பிரபுக்களுக்கும், பெரியோர்களுக்கும் தூதுவர்கள் மூலம் அனுப்பினார்கள். அவ்வோலைகளைப்பார்த்தவுடன் ஆங்காங்குள்ள அரசர்களும், மற்றவர்களும், 'இறந்து போன சந்திராங்கதன் மீண்டும் உயிர் பெற்று வந்தது அதிசயத்திலும் அதிசயம்! ஆதலால் நாம்

அவசியம் போய் அந்தத் திருமணக் காட்சியைப் பார்க்க வேண்டும்' என்று புறப்பட்டு மாவிந்த நகரத்தில் வந்து கூடிக்கொண்டிருந்தார்கள். கலியாணத்திற்குரிய பொருள்க ளெல்லாம் சேகரிக்கப்பட்டன; மாவிந்த நகரம் அமரா வதிபோல் அலங்கரிக்கப்பட்டது; அரண்மனையும் புதுப் பிக்கப்பட்டது; கலியாண மண்டபம் இந்திரனுடைய சபாமண்டபத்திற்கும் மேற்பட்ட சிறப்பினை யுடையதாய் நிருமிக்கப் பட்டது. கலியாண தினத்தன்று, இந்திர சேனனும் சித்திரவருமனும் அலங்கரித்துக் கொண்டு மண மண்டபத்தில் வந்துசேர்ந்தார்கள். மற்றப்பிராமணர்களும், பெரியோர்களும், முடிமன்னர்களும், பிரஜைக்களும், இதர ஜனங்களும் அங்கு வந்து கூடினர். மாப்பிள்ளையும், பெண் ணும் தோழிகளால் புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்விக்கப் பெற்று மணக்கோலங் கொண்டு மணவறைப் பந்தலில் வந்தமர்ந்தார்கள். வேதசாஸ்திர நிபுணர்களாகிய பிராமணர்கள் மந்திரங் கூறி ஓமாக்கினியை வளர்க்க அதன் முன்னிலையில் வேதவிதிப்படி சந்திராங்கதனுக்கும், சீமந்தனிக்கும் திருமணம் வெகு சிறப்பாக நிறைவே றிற்று. மங்களவாத்தியங்கள், கடலொலிபோல் முழங்கின. பெரியோர்கள்,

"செந்திரு மடந்தை யோடு சீதரன் விளங்கல் போன்றும்
சந்ததம் உமையா ளோடு தாணுசேர்ந் திலங்கல் போன்றும்
எந்தநா ளினுமன் போடு இணைபிரி யாது கூடிச்
சந்ததி செல்வ மோங்கத் தம்பதி யிவர்கள் வாழ்க"

என்று வாழ்த்தினார்கள். பின்னர், விருந்துகளும், வேடிக் கைகளும், தானதர்மங்களும் நடைபெற்றன. நகரெங்கும் சந்தோஷ முழக்கமாயிருந்தது. சிலதினங்கள் சென்றபின், கலியாணத்திற்கு வந்தவர்க ளெல்லோரும் அங்கிருக்கும்

போதே இந்திரசேனன், சந்திராங்கதனுடைய சம்மதியைப் பெற்று மற்றொருதினத்தில், நன் முகூர்த்தத்தில் பெரியோர்கள் முன்னிலையில் அவனுக்கு இராஜ்ஜிய பட்டாபிஷேகமும் செய்து வைத்தான். அதன்மேல் சந்திராங்கதன் நாகலோகத்திலிருந்து தனக்குத் துணையாக வந்த இருவருக்கும் பூவுலகத்திலுள்ள அதிசயமான பொருள்களை யெல்லாம் நன்கொடையாக அளித்துத் தன்னுடைய செய்திகளை யெல்லாம் நாகராஜனுக் கறிவிக்கும்படி அவர்களை நாகலோகத்திற் கனுப்பினான். சித்திரவருமன், சந்திராங்கதனையும் சீமந்தனியையும் நோக்கி, "நான் தூரதேசத்திலிருக்கின்றேனென்று நீங்கள் மனக்கவலை யடையவேண்டாம்; ஆரியாவர்த்த நாடு சமீபத்திலேயே இருக்கின்றது; நினைத்தபோது நீங்கள் அங்கேவரலாம்; நான் இங்கே வரலாம்; இனிச் சிவபெருமான் திருவருளால் உங்களுக்கு நன்மையே உண்டாகும்; சிவபெருமான் திருவருளாலேயே நாமெல்லோரும் துக்கநிவிர்த்தி யடைந்தோமாதலின், அவர்க்குரிய சோமவார விரதத்தை நீங்கள் கைவிடவேண்டாம்; முன்னினும் சிரத்தையாகச் செய்துவரவேண்டும்" என்று சொல்லி மகளுக்குவேண்டிய ஸ்ரீதனப் பொருள்களை யெல்லாம் கொடுத்துவிட்டு அவளிடத்தும், மருகனிடத்திலும், இந்திரசேனனிடத்திலும் விடைபெற்றுக்கொண்டு தன் சுற்றத்தாரோடு தன்னுடைய நகரம்போய்ச் சேர்ந்தான். மற்ற அரசர்கள், பிரபுக்கள் முதலிய எல்லோரும் இந்திரசேனனிடத்தும், சந்திராங்கதனிடத்தும் விடைபெற்றுத் தங்கள் இருப்பிடங்களுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். சில மாதங்கள் கழிந்தபின், இந்திரசேனன் உலக வாழ்க்கையில் வெறுப்படைந்து துறவடையக்கருதித் தன் விருப்பத்தை மகனிடம் தெரிவித்து அவனுடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டு, அவனுக்கு இராஜரீகம் நடத்தவேண்டிய

முறைமைகளை யெல்லாம் விளக்கமாகப் போதித்துவிட்டுத் துறவடைந்து காட்டிறங்கெங்கித் தவத்திற் பிரவேசித்தான்.

அதன்மேல் சந்திராங்கதன் மனுநீதி வழுவாமல், சகலவுயிர்களையும் தன்னுயிரைப்போல் பாவித்து செங்கோல் நடத்திச் சீமந்தனியுடன் அன்புமிக இன்புற்று வாழ்ந்து வந்தான். இவனுடைய நீதிபொருந்திய ஆளுகையில், மாதம் மும்மாரிகள் வழுவாமற்பெய்தன; நிலங்களெல்லாம் நல்ல வளத்தைக் கொடுத்தன ; பசுக்கள் பால்வளத்தைக் கொடுத்து நாடோறும் விருத்தியடைந்துகொண்டிருந்தன; சிற்றரசர்களெல்லோரும் கிரமமாகப் பகுதிசெலுத்தி வந்தார்கள் ; மிகுமழை, காற்று, நெருப்பு, விட்டில், யானை, பகை, மிருகம், பஞ்சம் முதலியவற்றால் எவ்வித கேடுகளும நிடதநாட்டில் சம்பவிக்காதிருந்தன ; வேதியர்கள் யாகாதி கிருத்தியங்களைச் சரிவர நடத்திவந்தார்கள் ; தானதருமங்கள் தடையின்றி நடந்துவந்தன, தேவபூஜைகளும், தேவாலயச் சிறப்புக்களும் செவ்விதில் நடைபெற்று வந்தன. மற்ற அரசர்களுடைய ஆளுகைகளைக் காட்டிலும், சந்திராங்கதனுடைய ஆட்சிமுறை சிறந்திருந்தமையால் அவனை மூவுலகத்தார்களும் கொண்டாடி வந்தார்கள். நாகராஜனுக்கும், சந்திராங்கதனுக்கும் ஏற்பட்டிருந்த நட்பு நாடோறும் விருத்தியடைந்துகொண்டே யிருந்தது; அதனால் இங்கும் அங்கும் உள்ளவர்கள் நாகலோகத்திற்கும் பூவுலகத்திற்கும், போக்குவரவுடையவர்களா யிருந்தார்கள். அவ்வாறே, சந்திராங்கதனுடைய மாமனாரின் நாடாகிய ஆரியாவர்த்த நாட்டிற்கும், நிடத நாட்டிற்கும், எப்பொழுதும் கூட்டுறவு விருத்தியடைந்துகொண்டு வந்தது. இவ்வகைச் சிறப்புக்களுடன் சந்திராங்கதனும் சீமந்தனியும் வாழ்ந்துவருங் காலத்தில் சிவபெருமான் திருவருளாலும் உமாதேவியாரின் கிருபா கடாக்ஷத்தினாலும் அவர்

களுக்கு மிக்க விவேகத்தையுடைய எட்டுப் புத்திரர்களும், மகா உத்தமியாகிய ஒரு புத்திரியும் பிறந்து சிரேஷ்டமுடையவர்களாய் வளர்ந்தார்கள். எல்லா நன்மைகளும் சோமவார விரத பலத்தினலேயே தனக்குக் கிடைத்தபடியால் சீமந்தனி, முன்னினும் மிக்க பக்தி சிரத்தையுடன் சோமவார விரதத்தை அனுஷ்டிக்கத் தொடங்கி, சிவபெருமானையும், உமாதேவியாரையும் பூஜித்து, விரததினங்களில் தன்னிடம் யாசகத்திற்கு வரும் ஆண்மக்களையும், பெண் மக்களையும் சிவபெருமான் அம்சமாகவும், உமாதேவியின் அம்சமாகவும் பாவித்து வணங்கி அவர்கள் வேண்டியவற்றையெல்லாம் தடையின்றிக் கொடுத்துக்கொண்டுவரும் வழக்கத்தை மேற்கொண் டிருந்தாள். அதிலும் பிராமண தம்பதிகளை அதிகமாகக் கொண்டாடுவாள்; அந்த விரதத்தின் மகிமையால், அவள் எதை எவ்வாறு நினைக்கின்ருளோ, அஃதவவாறே ஆகக்கூடிய ஓர் உயர்ந்த சித்தி அவளிடத்தில் உண்டாகி யிருந்தது.

---

## அத்தியாயம்—8

### சோமவார விரத மகிமையால், சீமந்தனியின் மனோ பாவனை நினைத்தபடியே சித்தித்தல்.

சீமந்தனியும், சந்திராங்கதனும் மேற்கூறியபடி சோமவார விரதத்தை அனுஷ்டித்துக்கொண்டு சுகமாக வாழ்ந்துவரும் காலத்தில், அப்போதிருந்த பற்பல நாடுகளில் நிடதநாட்டைப் போலவே, வைதர்ப்பநாடும் சிறப்புற்றிருந்தது. உலகத்தில், சுக்கிரனென்னும் கிரகமானது மூடத்தில் மறைந்தாலும், உரோகிணி நக்ஷத்திரத்தைப் பேதித்துக்கொண்டு சனிக்கிரகம் வக்கிரித்துச் சென்ருலும், நியதியாகப் பொருந்திய மழைப்பருவந் தப்பினும் அந்த நாட்டில் மாதந்தோறும் மும்மாரிபெய்வது தவறமாட்

டாது; அதனால் அந்நாடு எங்கும் செழிப்புற்ற சோலைகளாற் சூழப்பெற்றுப் பற்பல வளங்களும் நிறைய எப்பொழுதும் மிக்க செல்வமுடையதாய் விளங்கும். இத்தகைய சிறப்புள்ள அந்நாட்டில் வாழ்ந்துவந்த பிராமணர்களுக்குள்ளே வேதமித்திரன் என்பவனும், சார்ச்சுதன் என்பவனும் வேதசாஸ்திர உணர்ச்சியுடையவர்களாய் மேன்மைபெற் றிருந்தார்கள். இவர்களுள் வேதமித்திரனுக்குச் சுமேதா என்பவனும், சார்ச்சுதனுக்குச் சாமவானென்பவனும் புத்திரராகத் தோன்றி யிருந்தார்கள். இவர்கள் வித்தியார்த்திகளாயிருக்கும் பருவத்தில், மன்மதனும், அவன் தம்பியாகிய சாமனும்போல அழகுடையவர்களாயும், பிரியாத நேசமுடையவர்களாயு மிருந்து, நல்லாசிரியனை யடுத்து, அவனிடத்தில், வேத வேதாந்தங்களையும், பதினெண் புராணங்களையும், மற்றுமுள்ள கலைகளையும் குற்றமறக் கற்றுணர்ந்து அவற்றில் மிகத் தேர்ச்சியுடையவர்களாய் விளங்கினார்கள்.

அப்போது, அவர்களைப்பெற்ற தந்தையர் இருவரும், அவர்களுடைய கல்வித் தேர்ச்சியையும், அறிவின் விசாலத்தையும், அழகின் உயர்வையும் நோக்கி அளவற்ற ஆனந்தமடைந்து ஒருநாள் அவர்களைப்பார்த்து, "குமாரர்களே! நீங்கள் சகல சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்த புத்திமான்களா யிருக்கின்றீர்கள்; உங்களுடைய கல்வித்திறமையைப்பற்றி நாங்கள் மகிழ்ச்சி யடைகின்றோம்; இனி நீங்கள், இவ்வுலகத்துக்கே ஆபரணம்போல் விளங்கும் இந்த வைதர்ப்பநாட்டரசனிடம் சென்று, உங்கள் கல்வித்திறமையைக் காட்டி, அதற்குப் பரிசிலாக அவன் கொடுக்கும் திரவியத்தைப் பெற்றுக்கொண்டுவந்து, அத்திரவியத்தினால் உங்களுக்கு விருப்பமான கன்னிகைகளைத் தேடி மணம்புரிந்து கொள்ளுங்கள்" என்று சொன்னார்கள்.

இவ்வாறு அவர்கள் கூறியதற்கு, அந்தப் பிராமணவாலி பர் இருவரும் சம்மதித்து, வைதர்ப்பநாட்டரசனிடம் சென்று, தாங்கள் கற்ற கல்விகளையெல்லாம் விரிவாகப் பிரசங்கம் செய்தார்கள். அரசன் அவர்களுடைய கல்விப் பிரசங்கங்களைக் கேட்டு மனமகிழ்ந்து, அவர்களை நோக்கி, "பிராமணச் சிறுவர்களே! உங்கள் கல்வியும், பிரசங்கமும் மிக நன்றாயிருக்கின்றன; அவற்றைக்கேட்டு நான் அளவற்ற ஆனந்தமடைந்தேன்; நீங்கள், உங்களுக் கிஷ்டமானதை என்னிடம் கேட்டுப் பெற்றுக்கொள்ளுங்கள்" என்றுரைத் தான். அதற்குச் சுமேதஸும், சாமவானும், "வெற்றி மாலைசூடிய கொற்றவர் பெருமானே! நாங்கள் அழகிய கன்னியரைத் தேடி விவாகஞ் செய்துகொள்ள உத் தேசித்து, அதற்கு வேண்டும் திரவியம்பெற நாடியே உம் மிடத்திற்கு வந்தோம்; ஆதலின், எங்கள் கலியாணத்திற் குப் போதுமான திரவியத்தை நீர் கொடுத்தருளவேண் டும்" என்று கூறினார்கள். இதைக் கேட்டவுடன் அரசன், அவர்களைக்கொண்டு ஒரு வேடிக்கையான காரியத்தை நடத்திப் பார்த்து ஆனந்திக்கக்கருதி அவர்களை நோக்கி, "வாலிபர்களே! உங்கள் கலியாணத்திற்குப் பணம் சுலப மாகக் கிடைக்கும் மார்க்கமொன் றிருக்கின்றது; நீங்கள் அதைச் செய்வீர்களானால் எளிதிற் பணம் பெறலாம்; எப்படியெனில், மிக்க நீர்வளம்பொருந்திய நிடதேசத் தரசன் மனைவியாகிய சீமந்தனி யென்பவள், சோமவார தினத்தில் விரதமிருந்து, இளம்பிறையணிந்த சடையை யுடைய சிவபெருமானையும், உமாதேவியையும் பூஜித்து அவர்களுக்கு அருச்சனை புரிந்து, பிராமணர்களை மனைவி மாரோடு வரச்செய்து, அத் தம்பதிகளை உமாமகேசுரராகப் பாவித்து உபசரித்து அவர்களுக்கு வேண்டிய ஆபரணங் களையும், திரவியங்களையும் விருப்பம் தீருமட்டும் கொடுத்து வரும் வழக்கத்தை மேற்கொண்டிருக்கிறாள்; ஆதலின்

உங்களில் ஒருவன், மணமகனாகவும், மற்றொருவன் அவனுடைய மனைவியாகவும் வேடந்தரித்து நீங்களிருவரும் சோமவாரதினத்தன்று அந்தச் சீமந்தனியிடத்திற் செல்வீர்களானால், அவள், உங்களை உமாமகேசுரராகவே பாவனை செய்து உங்களுக்குவேண்டிய திரவியங்களைக்கொடுப்பாள்; நீங்கள் இந்த வஞ்சனையைச் செய்து அவளால் கொடுக்கப்படும் திரவியத்தைப் பெற்றுக் கொண்டு வந்தபின்னர், அதைக்கொண்டு, அழகிய பெண்ணைத்தேடி மணம்புரிந்து கொள்ளலாம்" என்று சொன்னான். தெய்வங்களிடத்தும், தேவகாரியங்களிலும், தெய்வ பக்தர்களிடத்தும், பெரியோர்களிடத்தும், இத்தகைய வஞ்சனை முதலிய துஷ்ட காரியங்களைச் செய்வது தீமைக்கிடமா யிருப்பினும், அரசன், செல்வச் செருக்கினால் அதனையுணராமல், இவ்வாறு சிவபக்தியிற் சிறந்த சீமந்தனியிடத்தில் வஞ்சனை புரியும் படி அந்தப் பிராமணச் சிறுவர்களைத் தூண்டினான். பணச் செருக்கில் மூழ்கியிருப்பவர்கள், விவேகக்குறைவால் இவ்வாறு செய்யத்தகாத காரியங்களையும் துணிந்து செய்வது உலகத்தியற்கை.

அரசன் கூறிய இத் தீய மொழிகளைக் கேட்டவுடன், அந்தப் பிராமண வாலிபர்கள் மனம்வருந்தி, அவனை நோக்கி, "நீதியிற்சிறந்த மன்னரே! சகல சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்திருக்கும் எங்களுக்கு அச்செய்கை தகாததாகும்;

தேவருக் கடியர்பால் தீமை செய்தவர்
பாவமே மிகுந்துபாழ் நரகில் பாய்வரால்
ஆவதொன் றின்றியே அவர் குலத்தொடும்
சாவது திண்ணமித் தரணி மீதரோ.

என்றபடி, நாங்கள் இத்தீக்காரியத்தைச் செய்வோமாயின் குலத்தொடு மழிந்து கொடுநரகில் வீழ்வது நிச்சயமாகும்; இம்மை மறுமை யென்னும் இரண்டிடத்தும் மிக்க துன்பத்

தையே அடைவோம்; ஆதலின், மகா நீதிமானாகிய நீர் எங்களுக்கிந்தக் கட்டளையிடுவது தகுதியன்று; வேறே தேனும் நற்காரியத்தைச் சொல்வீரானால் நாங்கள் தடையின்றிச் செய்வோம்; இதைச் செய்யவே மாட்டோம்" என்று சொன்னார்கள்.

இந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் அரசனுக்குக் கோபம் அதிகரித்துவிட்டது. அதனால் அவன், 'இவர்களைத் தக்கபடி தண்டிக்க வேண்டும்' என்று துணிவு கொண்டு, சிவந்த கண்களுடன் அவ்வேதியச் சிறுவர்களை நோக்கி, "ஏழைப் பிராமணப் பிள்ளைகளே! நான் அரசனென்பதை நீங்கள் சிறிதும் மதியாமல் என் சொல்லைத் தடுக்கின்றீர்கள்; அரசனாயிருப்பவன் நல்லதைச் சொன்னாலும் கெட்டதைச் சொன்னாலும், அவனுக்குக் குட்பட்டவர்கள் அவனுடைய வார்த்தைகளைத் தடுக்காமல் ஏற்றுக் கொள்ளவேண்டும்; அப்படி ஏற்றுக்கொள்ளாமல் யாரேனும் தடுத்தால் அவரைத் தண்டிக்கும் உரிமை அரசனுக்கேற்பட்டிருக்கின்றது; ஆதலால் இப்பொழுதுங்களை நான் தண்டிப்பேன்; மேலும் நீங்கள், பிராமணரென்ற யோக்கியதை யில்லாமல் நான்கு ஜாதியாருக்கும் தாழ்ந்தவகுப்பிற் சாரும்படி செய்துவிடுவேன்" என்று அதட்டிக் கூறினான். தனவந்தர்கள் நீதிதவறி நடக்குங் காலத்தில் எவரேனும் அவர்களுக்குப் புத்தி கூறினால், அவர்கள் அதை ஏற்றுக் கொள்ளாமல் நியாயம் பேசியவரையே கோபித்துப் பயமுறுத்துவது உலகியற்கை யன்றோ? அரசன் இவ்வாறு கோபித்துக் கூறியவுடனே பிராமணச் சிறுவர்கள் பயந்து, "மன்னன் கட்டளைப்படி நாம் செய்யாவிட்டால் நம் தலையே போய்விடும்; அது பாவச்செயலா யிருந்தாலும் நாம் அதைச் செய்துதான் தொலைக்க வேண்டும்; வகை தெரியாமல் இவனிடத்தில் வந்து இந்தச் சங்கடத்தில் சிக்

இக்கொண்டோம்" என்று கலங்கி, அம்மன்னனை நோக்கி, "எங்களிறைவரே! உமதாளுகைக்குட்பட்ட நாங்கள், உம்முடைய கட்டளையை மீறி எப்பொழுதும் நடக்கமாட்டோம்; அப்படி நடத்தற்கு எங்களிடம் என்ன ஆற்றலிருக்கின்றது? அவ்விஷயம் நீதிக்கு விரோதமானதாக எங்கள் மனதில் தோன்றியபடியால் நாங்கள் அதனை எடுத்துக் கூறினோம்; அஃது உமக்குச் சம்மதியில்லாதிருக்கின்றபடியால், இனித் தடுத்துக் கூறமாட்டோம்; இப்பொழுதே நிடததேசம் சென்று நீர் சொல்லியதை நிறைவேற்றி வருகின்றோம்" என்று கூறினார்கள்.

அதன்மேல் அரசன் மகிழ்ச்சியடைந்து, அலங்காரம் செய்பவர்களை அழைப்பித்து, சாமவானுக்குப் பெண்ணுருவமைத்துக் கோலஞ்செய்யும்படி அவர்களுக்குக் கட்டளையிட்டான். உடனே அவர்கள் அவனுக்குப் பெண் வேடம் அமைத்து, சந்தனக் குழம்பைப்பூசி, முத்துமாலை யணிந்து, கூந்தலை வாரிக் கொண்டைபோட்டுப் பூமாலை சூட்டி, கண்களில் மையிட்டு, செவிகளில் பொற்குண்டலங்களைத் தரித்து, நெற்றியில் திரிபுண்டரமாக விபூதியணிந்து, மற்ற அவயவங்களில் இரத்திநாபரணங்களை யணிந்து, இடையில் பட்டு வஸ்திரங்கட்டி, விஷ்ணுகொண்ட மோகினி வடிவத்தைப் போன்ற பேரழகு விளங்கும்படி அலங்காரஞ்செய்து அவனை அரசன் முன்னே கொண்டுவந்து நிறுத்தினார்கள்.

அரசன், அப்பெண் வடிவத்தைப்பார்த்து, "இவ்வுருவம் மோகினியைப்போன்று மிக்க அழகாயிருக்கின்றது" என்று வியந்து, சுமேதாவை நோக்கி, "இனி நீ இந்த வேடப்பெண்ணை உன் மனைவியாகப் பாவித்து அழைத்துக் கொண்டு சீமந்தனியிடம் சென்று திரவியம்பெற்று வருவாயாக" என்று கட்டளையிட்டான். அதன்மேல் அந்தச் சுமேதாவானவன், அவ்வேஷப் பெண்ணை அழைத்துக்

கொண்டு பிரயாணமாகி, நிடத தேசம் நோக்கித் தங்கள் தங்கள் பத்தினிமார்களுடன் செல்லும் பிராமணர்களுடன் சென்றான். எல்லோரும் மாவிந்த நகரம் போய்ச்சேர்ந்த வுடன், சுமேதாவும், பெண் வடிவந்தாங்கிய சாமவானென் பவனும் அரண்மனையிற்புகுந்து, நெடிய கண்களையுடைய சீமந்தனியைக் கண்டு, 'நீ எப்பொழுதும் சுமங்கலியாயிருக் கக்கடவாய்' என்று ஆசிர்வதித்தார்கள். அவர்களைக் கண்டவுடன் சீமந்தனி மனமகிழ்ந்து, எதிர்கொண் டழைத்து உபசரித்துப் பூஜித்து, அங்குவந்திருந்த மற்ற பிராமணர்களுடன் அமரச்செய்து, எல்லோருக்கும் வரி சைக்கிரமமாக வேண்டுவனவற்றைக் கொடுக்கத் தொடங்கி ஒவ்வொருவருடைய முகத்தையும் பார்த்தாள். அப்போது, சுமேதா என்பவனும் சாமவானென்பவனும் புருஷனும் மனைவியுமாக மாறுவேடந்தரித்து வந்திருக்கின்றார்களென் பது அவளுக்கு விளங்கிற்று. அதனால், அவள் புன் சிரிப் புடன், " அந்தோ ! இப்பிராமணச் சிறுவர்கள் பொரு ளாசையால் இவ்வாறு மாறுவேடந்தரித்து வந்திருக்கிறார் கள் ; பொருளாசையானது செய்யத்தகாத காரியங்களைச் செய்யும்படி மனிதரைத்தூண்டுவது உலகத்தியற்கை.

பொய்யினைப்புகலச் செய்யும் பூமியில் உருளச் செய்யும்
கையினை வயிற்றறைந்து கதறிடச்செய்யும் நல்ல
மெய்யினைப் போக்கி மாறு வேடங்கள் தரிக்கச் செய்யும்
செய்யொணாச் செய்கை யெல்லாம் செய்விக்கும் பொருள்
[விருப்பே.

என்பது சரியாயிருக்கின்றது ; இந்தச் செய்கையை இவர் கள், தாமாகவே செய்துகொண்டார்களோ, வேறொருவர் துர்ப்போதனையாற் செய்து கொண்டார்களோ? எவ்வாறு செய்யினும் இது தவறானகாரியம் ; ஆயினும் நாம் இதைப் பற்றிச் சிந்திக்க வேண்டியதுமில்லை, இவர்களுக்குப் புத்தி

கூற வேண்டியதுமில்லை; இப்பாவச் செய்கைக்குரிய பயனை இவர்கள் அடைவார்கள்; நாம், 'பிராமணர்களில் எவர்களாயிருந்தாலும் தம்பதிகளாக வருவோரை உமாமகேசுரராகவே நினைத்து அவர்க்கு வேண்டுவன கொடுப்போம்' என்ற நியமம் பூண்டிருக்கின்றோம். ஆதலின், மற்றவர்களைப் பூஜிப்பதுபோலவே இவர்களையும் பூஜித்தனுப்பிவிடுவோம்'' என்று தீர்மானித்து அங்கு வந்திருந்த பிராமணத் தம்பதிகளெல்லோரையும் பரமசிவனும் பார்வதியுமென மனத்திற் பாவனை செய்துகொண்டு, பூமாலை, சந்தனக் குழம்பு, நல்ல வஸ்திரம், ஆபரணங்கள், திரவியங்கள், பச்சைக் கற்பூரம், தாம்பூலம், பால், பழம், தேன், மதுரமுள்ள கருப்பஞ்சாறு முதலியவற்றை யெல்லாம் தனித்தனியாகப் பொன் வட்டில்களில் ஏந்தி அவர்களுக்குக் கொடுத்து, மேலும் சிற்றுண்டியோடு அன்னமுங் கொடுத்து, வணக்கம் புரிந்து துதி கூறினாள். அவர்கள், தங்களுக்குக் கிடைத்தவரையில் திருப்தியடையாமல், மேலும் பேராசை கொண்டு பற்பல வஸ்துக்களைக் கேட்கத் தொடங்கினார்கள்: ஒருவன், சீமந்தனி கையிலணிந்திருந்த மோதிரத்தைக் கேட்டான்; மற்றொருவன் இரத்தின கடகத்தைக் கேட்டான்; ஒரு பிராமணப் பெண் அவளுடைய கைவளையைக் கேட்டாள்; மற்றொருத்தி இரத்தின மாலையைக் கேட்டாள்; ஒரு பிராமணன் குழந்தைக்குப் பாலூட்டுதற்குப் பாற்பசு வேண்டுமென்றான்; மற்றொருவன் ஒரு கிராமம் வேண்டுமென்றான்; இன்னுமொருவன் ஒரு காணி நிலம் வேண்டுமென்றான்; ஒரு பிராமணப் பெண் தன் குழந்தையை எடுத்துவைத்துக் கொள்வதற்குப் பணிப்பெண்ணொருத்தி வேண்டுமென்றாள்; மற்றொரு வேதியன் தனக்குத் தொண்டு புரிவதற்கு அடிமையாள் வேண்டுமென்றான்; ஒருவன் பூஜைப் பாத்திரங்களையே கேட்டுவிட்

டான். பேராசை யுள்ளவர்கள் தானங் கொடுக்குமிடத்தைக் கண்டால், விரும்பியவற்றையெல்லாம் கேட்பது உலகியற்கை யன்றோ ?

இப்படி அவர்கள், கண்ட கண்ட பொருள்களை யெல்லாம் கேட்டும், சீமந்தனி அவர்கள்மீது சிறிதேனும் அருவருப்புக் கொள்ளாமல் ஒவ்வொருவருக்கும் விருப்பமானவற்றை யெல்லாம் அன்புடன் கொடுத்து, 'நீங்கள் சந்தோஷமாகச் செல்லுங்கள்' என்று உத்தரவுகொடுத்தாள். எல்லோரும் அவளிடம் விடைபெற்றுக் கொண்டு போய் விட்டார்கள். அவர்களைப் போலவே, மாறு வேடக்காரர்களாகிய சுமேதாவும், சாமவானும் விடைபெற்றுச்சென்றார்கள். சீமந்தனி இவர்களையும் உமா மகேசுரராகவே பாவித்துப் பூஜித்தபடியால், அவளுடைய மனோ பாவனையின் படியே ஸ்திரீ வேடந்தரித்திருந்த சாமவான் ஆண் தன்மை நீங்கிப் பெண் தன்மையை அடைந்துவிட்டான்; அவனுக்குத் தான் ஆண்மகனென்னும் நினைவே இல்லாமற் போய்விட்டது; இயற்கைப் பெண்ணிற்குரிய அங்க அடையாளங்களும், மனப்போக்கும், செய்கையும், நடையுடை பாவனையும் உண்டாகிவிட்டன. இவ்வாறாகிய அந்தப் பெண், நடுவழியிற் செல்லும்போது, தன்னுடன் வந்த சுமேதாவை, தன்னை மணந்து கொள்ளத் தக்க நாயகனென்று நினைத்து அவன்மீது விசுவாசம் வைத்து அன்புடன் அவன் முகத்தை நோக்கி, "துணைவனே! நான் உன்னை எனக்குரிய கணவனாக நினைத்து விட்டேன்; (அங்கிருந்த சோலையையும் மண்டபத்தையும் காட்டி) இந்தச் சோலையிலுள்ள இம் மண்டபத்தில் நீ தங்கி மோதிரம் மாற்றி என்னைக் காந்தர்வமணம்புரிந்துகொள்ளவேண்டும்; இதை நீ தடுத்தால் நான் இறந்து போவேன்; ஸ்திரீகள் தாமே ஆடவரை மணக்க விரும்பினால், அவ்விருப்பத்தைத்

தடை செய்வது ஆடவர்க்குத் தர்மமாகாது" என்று கூறினாள்.

இந்த விபரீத வார்த்தைகளைச் சுமேதா கேட்டவுடன் திடுக்கிட்டு, "இஃதென்ன கிணறுவெட்டப் பூதம் பிறந்தது போலவும், பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்ததுபோலவு மிருக்கின்றதே நமது காரியம்! நம் நேயன் ஏன் இப்படிப் பெண்களைப் போல நடித்துப் பேசுகின்றான்? தான் பெண்வேடந் தரித்திருப்பதனால் அதற்குத் தக நடித்து நம்மைப் பரிகசிக்க நினைத்து இவ்வாறு பேசுகின்றான் போலும்" என்று அந்தப் பெண் பேசிய வார்த்தைகளுக்குப் பிரதியுத்தர மொன்றுஞ் சொல்லாமற் சென்றான். அந்தோ! பாவம்! நடந்திருக்கும் விஷயத்தின் உண்மை அவனுக்குத் தெரியாது. அதனாலேயே அவன் அவ்வித அபிப்பிராயத்தோடு விடையொன்றுங் கூறாமற் போயினான். அவ்வாறு சென்றும் அந்தப் பெண் அவனை விட்டபாடில்லை. அவள் மறுபடியும் அவன் முன்னே போய் நின்று, "அழகு நிறைந்த காதலனே! நீ என்னை மணஞ்செய்து கொள்ளாமல் இவ்விடத்தை விட்டுப் போகக்கூடாது" என்று அவனைத் தடுத்தாள். அவ்வாறு தடுத்தவுடனே, சுமேதா, "இஃதென்ன அதிசயமா யிருக்கின்றது; இவன் நம்முடைய தோழன் தானே; இவன் பெண்ணைப்போல் நடிக்கின்றானென்று நாம் நினைத்தோம்; இவனுடைய பேச்சையும் செய்கையையும் நோக்கும்போது மெய்யாகவே ஒரு பெண்ணிற் குரியவைகளா யிருக்கின்றன; இவன் இப்படிச் செய்வதற்குக் காரணமென்ன?" என்று பலவாறு சந்தேகங்கொண்டு, அவள் சமீபத்திற் போய் அவளுடைய முகத்தை நன்றாக உற்று நோக்கினான். அப்போது அவளிடத்தில் ஆணிற்குரிய அடையாளங்கள் தோற்றாமல் எல்லா அவயவங்களும் பெண்ணிற் குரியனவாகவே விளங்கின,

அவ்வாறு தோற்றவே, அவன், அவளை உண்மையான பெண்ணென்றே தீர்மானித்து, தன்னுடைய சிநேகிதனைப் பிரித்து விட்டு யாரோ ஒரு பெண் மாயாவடிவமாகத் தோன்றியிருக்கின்றாளென்னும் நினைவு கொண்டு அவளுடைய அழகைக் கொண்டாடி, "இருளைப்போன்ற இவளுடைய கூந்தலின் அழகும், பூரணச் சந்திரனைப் போன்று பிரகாசிக்கும் முகத்தின் அழகும், நீலோற்பல மலரை வென்ற இரண்டு கண்களின் அழகும், மாந்தளிரை நிகர்த்த மேனியின் அழகும், செங்காந்தள் மலர் போன்ற மெல்லிய கைவிரல்களின் அழகும், மேகலாபரணத்தின் பிரகாசமும், மற்ற அவயவங்களின் அழகும் எவர்க்கும் அமையாத சிறப்பினையுடையனவாயிருக்கின்றன; செந்தாமரை மலர் மேல் வீற்றிருக்கும் திருமகள் தவிர இவ்வுலகத்தில் இவளுக்கிணையான பெண்கள் வேறெவர்களுமிருக்கமாட்டார்கள். இவள் யாரோ தெரியவில்லை; இவளுடையவரலாற்றை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்" என்று அவளை நோக்கி, "மாதே! நான், என் தோழனுடன் இவ்வனத்தின் வழி வந்தேன்; இப்பொழுது அவன் என் சமீபத்திலில்லை; நீ எதிர்ப்பட்டிருக்கின்றாய்; உன்னைப் பார்க்கப்பார்க்க என் மனத்தில் அதிசயம் அதிகரிக்கின்றது; திருமகள் போன்ற நீ யார்? நீ இவ்விடத்தில் வந்த காரணமியாது?" என்று வினவினன்.

இந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் அந்தமாது புன்சிரிப்புடன் அவனை நோக்கி, "நண்பனே! நீ என்னை யாரோ வென்று நினையாதே; உன்னுடைய துணைவனாகிய சாமவானே நான்; இப்போது சாமவதி யென்னும் மாதாகி உன்னை மணக்க விருப்பங்கொண்டேன்; ஆதலால், நீ என் விருப்பத்தைத் தடைசெய்து எனக்கு மனோ வேதனையை உண்டாக்காமல் என்னை மணம்புரிந்துகொள்; உன்மீதேற்பட்ட காதலால் நான் மிகுந்த கலக்கத்தை அடைகின்

றேன்" என்று சொன்னாள். இவற்றைக் கேட்டதும் சுமேதா, தன்னுடைய துணைவனாகிய சாமவானை, ஒழுக்கங்கெட்டுப் புத்திமாறிப் பேடிகளுக்குரிய துர்ச்செய்கையைச் செய்யத் துணிந்து மெய்யான பெண்ணைப்போலவே மாயம் புரிகின்றானென்று நினைத்து மிக்க சினமடைந்து அந்தப் பெண்ணைப் பார்த்து, "பாவியே! ஏதோ ஒரு காரணத்தால் உன் புத்தி கெட்டிருக்கின்றது; நீ இப்போது சீலங்கெட்டுத் துர்ச்செய்கையைச்செய்யத் துணிவுகொண்டு பேசத்தகாத வார்த்தைகளையெல்லாம் பேசுகின்றாய்; வேத சாஸ்திரங்களையெல்லாம் ஓதியுணர்ந்த சார்ச்சுதனாற் பெறப்பட்ட நீ, உன் குலவொழுக்கத்தையும், தவப்பெருமையினையும், கல்வியின் சிறப்பையும் மறந்து, அவற்றிற்கெல்லாம் மிக்க இழிவைத் தரும்படியான வேசையர் செய்கையை மேற்கொண்டிருக்கின்றாய்; இவ்வாறு, நீ ஆண்மகனுக்குத் தகாத பெண்ணியல்பை மேற்கொண்டு துர்ச்செய்கை செய்யத் துணிந்ததற்குக் காரணமென்னை? நீ பெண் வேடந்தரித்ததனால் அதற்குத் தக்கபடி உன் குணம் மாறிவிட்டதோ? தம்முடைய இயற்கையை மறைத்து வேறு வேடந் தரிப்பவர்களிற் சிறுபான்மையோர் அவ் வேடத்திற்குத் தக்கபடி நடந்துவரும் பழக்கத்தைக் கொண்டு நாளடைவில், அதற்குரிய குணங்களையும் செய்கைகளையும் அடைந்து விடுவார்கள் என்று உலக இயற்கை தெரிந்த பெரியோர்கள்கூற நான் கேட்டிருக்கின்றேன்; இப்போது உன்னுடைய செய்கை, அப் பெரியோர் வார்த்தைக்கு இலக்கியமா யிருக்கின்றது; சிறுபான்மையோ ரிடத்தில் அச்செய்கை நிகழ்வதா யிருந்தாலும் விவேகமற்றவர்களிடத்திலேயே உண்டாகும்; உன்னைப்போன்ற புத்திமானிடத்தில் உண்டாவதற்கு நியாயமில்லை; ஆதலால் நீ இச்செய்கையை விட்டுவிடு; இந்தப் பெண்வேடத்தையும் இப்பொ

மூதே களைந்துவிடு; நாம் உத்தேசித்து வந்த காரியந்தான் நிறைவேறிவிட்டதே ; இனி இந்தப் பெண்வேடம் அவசிய மில்லை; இதை அதிகநேரந் தாங்கியிருந்தாலும் உனக்கு மேலும் மேலும் மிக்க தோஷங்களே விளையும் ; வேடந் தரித்து நடித்தல் இழிவென்று பல சாஸ்திரங்கள் கூறு கின்றன ; இவ் வேடத்தினால் உன் மனம் மாறுபட்டிருந்தா லும் நீ உன்னுடைய விவேகத்தைக் கொண்டு அதனைத் தடுத்து நல் வழியில் திருப்பிக்கொள் ; வீணே கெட்டுப் போகாதே " என்று சொன்னான்.

இந்த நீதிகளெல்லாம் சாமவானா யிருந்தால்தானே அவன் செவிக்கேறும் ! அவளோ சாமாவானுடைய ஆண் தன்மையிலிருந்து உண்மையில் பெண்ணாகி விட்டவளாத லின், சுமேதா கூறியவைக ளெல்லாம் அவளுடைய செவி யிற் புகவில்லை. அதனால் அவன், " இந்தச் சுமேதா, நாம் உண்மையில் பெண்ணா யிருக்கின்றோ மென்பதைத் தெளி வாக உணர்ந்துகொள்ளாததனாலேயே இவ்வாறுபேசுகின் றான் ; நாம் பெண்தான் என்பதை நிரூபித்து விட்டால் அதன்மேல் இவன் நம் நோக்கத்திற் கிணங்குவான் " என்று நினைத்து அவனை நோக்கி, "நண்பனே ! நீ என்னைச் சாமவானென்று நினைத்துக்கொண்டே ஏதேதோ நீதி கூறு கின்றாய்; நான் சாமவானாயிருந்தால் நீதிக்கு விரோதமான செய்கையைச் செய்யத் துணியமாட்டேன் ; இப்போது உண்மையில் பெண்ணாகவே யிருக்கின்றேன்; கைந்நிறைந்த பொருளைக்காட்டிலும் கண்ணிறைந்த கணவனையே விரும்பு வது பெண்களின் இயற்கையாதலின், நான் எனது பெண் தன்மைக்குத் தக்கபடி அழகிய மணவாளனாகிய உன்னை நாடுகின்றேன் ; நீ என்னைத் தடுப்பது நீதியாகாது ; நான் பெண் என்பதை உறுதிப்படுத்துதற்குச் சில அங்க அடை யாளங்களைத்தெரிவிக்கின்றேன்;அவற்றைக்கொண்டாவது

என்னுடைய இயற்கையை நீ தெரிந்துகொள்" என்று கால், கை, கண், முகம், கூந்தல் முதலியவற்றின் அமைப்புக் களை முன்னிலும் தெளிவாகக் காட்டினாள். அந்த அங்கங் களின் அமைப்புக்கள் அவளை உண்மையான பெண் ணென்றே உணர்த்திவிட்டன.

அதன்மேல் சுமேதா, சந்தேகமற அவளைப் பெண் ணென்றே நிச்சயித்து, அதிசயித்து, "அந்தோ! அந்த வைதர்ப்ப நாட்டரசனுடைய துர்ப்போதனையைக் கேட் டதனாலேயே எனக்கும், என் நண்பனுக்கும் இத்துயரம் நேர்ந்தது; சீமந்தனி, சோமவாரவிரத தினத்தன்று, தன் னிடம் வரும் பிராமணர்களையும், அவர்களின் பத்தினிமார் களையும் சத்திசிவ ரூபமாகப் பாவனைசெய்து பூஜிக்கும் வழக்கப்படி நம்மையும், ஸ்திரீவேடந் தரித்த சாமவானை யும் புருஷனும் மனைவியுமென நினைத்து உமாமகேசுர ராகப் பாவித்து உபசரித்தபடியால் அவள் நினைத்தபடியே சாமவான் பெண்ணாகி நமக்குமனைவியாக விரும்புகின்றான்; உண்மையான சிவபக்தர்கள், நினைத்தபடி எதுவும் நடக்கு மென்பது இதனால் உறுதியாக விளங்குகின்றது; சிவனடி யார்களுக்கு அபசாரஞ் செய்பவர்களுக்குத் தீமை நேரு மென்பதை நாங்கள் உணர்ந்திருந்தும் இந்த அடாச் செய் கையைச் செய்து இவ்வாறு அவஸ்தைக்குள்ளாயினோம்; 'அடாது செய்வோர் படாது படுவர்' என்பது சரியாயிருக் கின்றது; இனி இதற்கென்ன செய்கிறது'' என்று மனங் கலங்கி ஒன்றும்பேச நாவெழாமல் தன்னை மறந்திருந்தான். அப்போது சாமவதி என்னும் பெண், சுமேதாவை நோக்கி, "என் காதலனே! நான் பெண் என்பதை இப்போது ஐயமற நீ உணர்ந்து கொண்டாய்; இனியும் மௌனஞ் சாதிப்பது அழகல்ல; என்னை விரைவில் மணம்புரிந்து கொள்" என்று இரந்து கேட்டுக் கொண்டாள்.

இந்த வார்த்தையைக் கேட்ட சுமேதா, 'இஃதேது இந்தச் சங்கடம் தொலையாதுபோ லிருக்கின்றதே' என்று துயரமுற்று, அவளை நோக்கி, "நாம் வேதங்களையும் சாஸ்திரங்களையும் நன்முகக் கற்றுணர்ந்திருக்கின்ரும்; அப்படியிருந்தும், சிவனடியாரிடத்தே வஞ்சனை செய்வது தீமைக்கிடமாமென்பதை ஆராயாமல், வைதர்ப்ப நாட்டரசன் பேச்சை நம்பி இத்தீக்காரியத்தைச் செய்து துன்பத்தை அடைந்தோம்; நாம் வஞ்சனையாகச் சீமந்தனியிடம்சென்ற போது அவள் நம்முடைய சூதையுணர்ந்தும், நம்மீது கோபித்துக் கொள்ளாமல் தன்னுடைய பெருங்குணத்திற்குத் தக்கபடி நம்மைப் பார்வதியும், பரமசிவனுமாகப் பாவித்து உண்மையாகப் பூஜித்தபடியினுல், அவளுடைய மனோபாவனையின்படியே நீ பெண்ணுகி விட்டாய்; உண்மைப் பக்தர்கள் நினைத்தபடி எதுவும் நடப்பது இயற்கை; அவர்களுக்குக் கடவுள் அத்தகைய சக்தியைக் கொடுத்து விடுவார்; அறிவற்ற மூடர்கள், மேல் வருவதை யுணராமல், பெரியோர்களுக்குக் குற்றஞ் செய்யத் துணிவார்களேயாஞல் அக்குற்றமானது, அந்த மூடர்களுக்கே வந்து சாருமென்பதை இப்போது நம்முடைய செய்கையால் நாம் தெரிந்து கொண்டோம்; அரசன் முன்னே நமக்குத் துர்ப்போதனை செய்தபோது நாம் அதற்குடன்படாமல், அதை நம் தந்தையர்களிடம் தெரிவித்திருந்தால், அவர்கள் நமக்கு இத்தகைய துன்பம் நேராதிருக்கும்படியான காரியத்தைச் செய்திருப்பார்கள்; அவ்வாறின்றி நாம் சிறுபிள்ளைத்தனமாக அரசன் பயமுறுத்தியதற்கஞ்சி இக்கொடுங் காரியத்திற் பிரவேசித்துத் துன்பத்தை வரவழைத்துக் கொண்டோம்; எனினும் நாம், நம்முடைய குலாசாரங்கள் கெடும்படி, நீ விரும்பும் அசம்பாவிதமான கலியாணத்தைச் செய்துகொள்ளலாகாது; நாம் அரியதவத்

தைச் செய்து உன்னுடைய பெண் தன்மை நீங்குதற்கான மார்க்கத்தைத் தேடுவோம்; தவத்தினாலும் அது முடியாமற்போனால் அதன் மேல் நான் உன்னை மணஞ்செய்து கொள்ளுகிறேன்'' என்றான். அவள் மிகுந்த விகாரமடைந்திருந்தபடியால் சுமேதாவின் நீதிகளைக் கேளாமல், தான் சொன்னதையே சொல்லிக்கொண் டிருந்தாள். மேலும், சுமேதா "பெண்ணே! நீ என் வார்த்தையைத் தடுக்காதே; நீ சொல்லுகிறபடி மணஞ் செய்து கொள்ளலாமென்றாலும் காந்தருவ விவாகம் நம் குலத்திற்கேற்றதன்று; அஃது அரசர்களுக்குரியது; மேலும் நம் தந்தையர்க்குத் தெரியாதபடி நாம் ஒரு காரியத்தையும் செய்யக்கூடாது; நாம் அவர்களிடம் போய் நமக்கு நேர்ந்திருக்கும் காரியத்தைச் சொல்லி, அவர்கள் என்ன சொல்லுகிறார்களோ அந்தப்படி நடந்து கொள்ளலாம்; இப்போது அவசரப்பட்டு ஒன்றையும் செய்துவிடக் கூடாது; ஆராயாது நாம் ஒரு காரியத்தைச் செய்து விடுவோமானால் அஃது என்றும் பழிப்புக்கிடமாய் விடும்; ஆதலால், நீ, நம் நகரத்திற்குச் செல்லும்வரையிலும் சற்றுப் பொறுமையோடிரு'' என்று கூறினான்.

இவ்வாறு கூறவே அந்தப் பெண்ணிற்கு, தான்சொல்வதை அவன் தடைசெய்கிறானென்ற கோபம் அதிகரித்தது; மனோவிகாரமும் அதிகப்பட்டது. இவ்வகைக் கோபத்தினாலும், விகாரத்தினாலும் அவளுடைய அறிவு கெட்டுப்போய் விட்டது. அதனால் அவள், செய்யத்தக்கது இன்னது, தகாதது இன்னது என்னும் பகுத்தறிவின்றி பலாத்காரமாக அவனுடைய கையைப்பற்றி யிழுத்துத் தேகத்தில் நகங்களால் கீறியும், கிள்ளியும் அவனுக்குப் பலவித உபத்திரவங்களை உண்டாக்கினாள். சுமேதா அத் துன்பங்களைச் சகிக்காமல் கோபங்கொண்டு அவள்முதுகில் நான்கு அறை அறைந்து அவளைப் பிடித்துத் தள்ளினான். அவள், "அடா

பாவி! தானே விரும்பி மணஞ்செய்து கொள்ள வரும் பெண்பாலாகிய என்னைத் தடுத்து அடித்து வருத்தி எனக்குத் துயர்செய்கின்றுயே;இப்பெண்பாவம் உன்னைச் சும்மா விடுமா? இனி என்னுயிர்போனாலும் சரி, உன்னுயிர்போனாலும் சரி; உன்னை நான் இலகுவில் விடமாட்டேன்'' என்று இராக்ஷஸிபோற்கதறி அவனைப்பிடித்திழுத்து, அவனுடம்பிற் பற்பல விடங்களிற் கிறிக் காயங்களை யுண்டாக்கித் துன்பப்படுத்தினள். அவன், "அந்தோ! நாம் விதிவசத்தால் இந்தப் பெண்பேயிடம் அகப்பட்டுக்கொண்டோமே; எப்படியாவது இவள் கையினின்றும் விடுபட்டோடிவிட வேண்டும்'' என்று தன்னுடைய பலத்தை யெல்லாம் செலுத்தி அவள் கைப்பிடியினின்றும் திமிறினன். உடனே அவள், 'இவன் தப்பித்துக்கொண்டு ஒடிவிடப்பார்க்கிறுன்' என்று ஆத்திரங்கொண்டு அவனுடைய மூக்கில் காயமுண்டாகும்படி கடித்துவிட்டாள். சிறியகாயம்பட்டாலும் நாசி மிக்க வேதனை செய்யக்கூடிய இடமாதலால், சுமேதாவுக்கு அதிகத் துன்பமுண்டாகிவிட்டது. அதனல் அவன், துள்ளித் துடித்துக் கையினல் ஓங்கி அவளை ஒருகுத்துக் குத்தி உதறித்தள்ளிவிட்டு ஒரேபாய்ச்சலாகப்பாய்ந்து, வலையைக் கிழித்துக்கொண்டோடும் கலைமான்போல விரைந்து, தன் தந்தை யிடத்தும், சாமவானின் தந்தையிடத்தும் இவ்விபரீத செய்கைகளைச் சொல்லுதற்கு ஓடினன். அந்தப் பெண்ணும் அவனைவிடாமல் தொடர்ந்து அவனுக்குப் பின் ஓடினள்.

இவ்வாறு ஓடிய இருவரும் தங்கள் நகரத்தையடைந்து சுமேதாவின் தந்தையாகிய வேதமித்திரனிடம் போய்ச் சேர்ந்தார்கள். அவன், தன் மகன், துணைவனகிய சாமவானைவிட்டு, ஒரு பெண்ணுடன் அவஸ்தைப்பட்டு மூக்கில் இரத்தமொழுகத் தலைவிரிகோலமாய் ஓடிவந்திருப்பதைப்

பார்த்து, அதிசயமும் மனக்கலக்கமும் அடைந்து சுமே தாவை நோக்கி, "புத்திரனே! இஃதென்ன ஆச்சரியம்! சாமாவானோடு சென்ற நீ இந்தப் பெண்ணோடு துன்பப் பட்டு மருண்டோடி வந்திருப்பதற்குக் காரணமென்ன? அவனெங்கே? இந்தப் பெண் யார்? என்ன நடந்தது?" என்று மனக் கலக்கத்துடன் கேட்டான். அதற்குச் சுமேதா, தானும் சாமாவானும் வைதர்ப்ப நாட்டரச னிடம் சென்றது முதல், அங்குத் திரும்பி வந்ததுவரை நடந்தவற்றையெல்லாம் விவரமாகக் கூறிக் கண்ணீர்விட் டழுதான். வேதமித்திரன், "அந்தோ! அந்த மன்னன், அறியாச் சிறுவர்களுக்கு இவ்வாறு துர்ப்போதனை செய்து கெடுதியை விளைவித்துவிட்டானே" என்று மனம் பதைத்து, அவர்களை அழைத்துக்கொண்டு சாமவான் தந் தையாகிய சார்ச்சுதனிடம் சென்று, அவர்களுக்கு அரச னால் நேர்ந்தவற்றைக் கூறினான். அவன், தன் பிள்ளைக்கு நேர்ந்தகதியை உணர்ந்து, "ஐயோ! அந்தக் கொடுங்கோல் மன்னன், நான் அருந்தவஞ்செய்து எனக்கு இருமைக்கும் துணையாகும்படி பெற்ற பிள்ளையைப் பெண்ணாகும்படி செய்து விட்டானே; இனி நான் என்ன செய்வேன்!" என்று கதறியழுதான். அவன் மனைவியும் தன் பிள்ளை பெண்ணாயிருப்பதைப் பார்த்துத் துக்கப்பட்டழுதாள். சுமேதாவின் தாயும் தன் மகனுக்கு நேர்ந்த கஷ்டத்தை யுணர்ந்து அங்கே ஓடிவந்து கண்கலங்கி நின்றாள்.

அதன் மேல், சார்ச்சுதன், "இங்கே நாம் துக்கப் பட்டுக்கொண்டிருப்பதால் ஒரு பயனுமுண்டாகப் போகிற தில்லை; அந்த அரசனிடம் சென்று, அவனுடைய துர்ச் செய்கையைப்பற்றி அவனைக் கண்டித்துப் பேசி இத் துன் பம் நீங்குதற்கு ஏதேனுமோர் மார்க்கத்தைத் தேடவேண் டும்" என்று அவர்களை யெல்லாம் அழைத்துக்கொண்டு

வைதர்ப்ப நாட்டரசனிடம் சென்று வயிற்றில் மோதி யறைந்துகொண்டு, "அந்தோ! அரசனே! உன்னை நம்பி யிருக்கும் பிராமணக் குடிகளாகிய எங்களுக்கு நீ நன்மை செய்யவேண்டியிருக்க மிகுந்த தீமையைச் செய்துவிட்டாயே; எங்களுடைய புத்திரர்களுக்குக் கலியாணஞ்செய்ய வேண்டிய பருவம் வந்துவிட்டபடியால், நாங்கள் அவர்களுக்கு மணஞ்செய்விக்கக் கருதி, அதன்பொருட்டு உன்னிடம் அவர்களுடைய கல்வித் திறமையைக்காட்டித் திரவியம் பெற்றுக்கொண்டு வரும்படி அவர்களை அனுப்பினோம்; நீ உன்னுடைய அந்தஸ்திற்குத் தக்கபடி அவர்களுக்குப் பொருள் கொடுத்தனுப்பவேண்டுவது நியாயம்; அப்படிப் பொருள்கொடுக்க உனக்கிஷ்டமில்லாவிட்டால், உன் அபிப்பிராயத்தைக் கூறி அவர்களை வீட்டிற் கனுப்பிவிடவேண்டும்; அவ்வாறு இவ்விரண்டி லொரு காரியத்தைச்செய்யாமல், அவர்கள் புருஷன் மனைவியாக வேடந்தரித்து மகா உத்தமியாகிய சீமந்தனியிடம் சென்றால் அவர்களுக்குப் பணம் கிடைக்குமென்று சொல்லி, அவர்கள் அதற்கஞ்சித் தடைசெய்தும், அவர்களைப் பயமுறுத்தி உன் எண்ணப் படியே வேடந்தரிக்கச்செய்து நிடத தேசத்திற் கனுப்பி யிருக்கின்றாய்; உனக்கது செல்வச் செருக்கால் விளையாட்டாயிருந்தது, எங்களுக்குத் தீமையாய் முடிந்தது; சிவ பக்தர்களிடம் வஞ்சனைசெய்தல் கெடுதியாய் முடியுமென்பதை நீ உணராமல் அந்தச் சூதைச் செய்யும்படி அவர்களைத் தூண்டியும் உனக் கொன்றும் கெடுதி நேராமல் அவர்களுக்கே நேர்ந்துவிட்டது. அவர்கள் உன் சொற்படி தம் பதிகளாகச் சென்றபோது சீமந்தனி, அவர்களை உண்மையான புருஷன் மனைவிபோலவே நினைத்துப் பரமசிவனும் பார்வதியுமெனப் பாவனைசெய்து பூஜித்தபடியால் என் மகன் உண்மைப் பெண்ணாகவே போய்விட்டான்; அத

ஞல் சுமேதாவுக்கும் பல கெடுதிகள் சம்பவித்திருக்கின் றன; இந்த அசம்பாவிதச் செய்கை நேர்ந்திருப்பதால் எங்கள் குலத்திற்கே பெரிய இழிவாய்விட்டது; புத்திர னில்லாதவர்க்குச் சுவர்க்கமில்லை யென்று சாஸ்திரங்கள் கூறுவதையுணர்ந்தே நான், அத்தெய்வலோக பதவியை அடையும் பொருட்டு அருந்தவஞ் செய்து ஒரு புத்தி ரனைப் பெற்றேன்; நீ உன்னுடைய பணச் செருக்கால் அவ னைத் தொலைத்துவிட்டாய்; இனி நான் நரகத்தை யன்றே அடையவேண்டும்; மணக்கோலத்துடன் என் புத்திரனைப் பார்த்து மகிழவேண்டு மென்றிருந்த நான், இப்போது இந்தப் பெண் வடிவத்துடன் பார்த்து எப்படி மனஞ்சகித் திருப்பேன்; ஒருபொழுதும் சகிக்கமாட்டேன்; நானும் என் மனைவியும் உன் எதிரிலேயே உயிரை விட்டுவிடுவோம்; இவ் வாறு செல்வச் செருக்கால் ஒரு பிராமண குடும்பத்திற்குப் பலவிதத்திலும் கெடுதியை விளைவித்த உனக்குத் தெய்வம் துணைச் செய்யுமா? உன்னை உலகத்தார் நிந்திக்கமாட்டார் களா? எங்கள் பழியை நீ தான் ஏற்றுக் கொள்ள வேண் டும்'' என்று கதறி நிலத்தில் விழ்ந்து புலம்பினான்.

பிராமணனுடைய பரிதாபச் செயல்களைப் பார்த்தவுட னே, அரசன், ''அந்தோ! நான் அறியாமையாலும், செல் வச் செருக்காலும் விளையாட்டுக் காரியத்தைச்செய்து பல வகையிலும் மிகுந்த பாவத்தைத் தேடிக்கொண்டேனே; இப்படி விபரீதம் விளையு மென்று நான் முந்தி நினைக்கவே யில்லையே; இனி இந்தத் தீவினைக் கென்செய்வேன்'' என்று திடுக்கிட்டு மனங்கலங்கி, அந்தப் பிராமணனுக்கு எவ்விதத்திலும் சமாதானம் சொல்ல முடியாதவனாய் மயங்கி நிலத்தில் வீழ்ந்தான். செல்வச் செருக்குடையவர் கள் அகங்காரங் கொண்டு, முதலில் ஆராயாமல் தீச் செயல்

களைச் செய்துவிட்டுப் பின்னர் இவ்வாறு துன்பத்தையடைவது உலகியற்கையன்றோ?

அப்படி வீழ்ந்த அரசனுடைய மனதை, அந்தப் பிராமணன் கூறிய வார்த்தைகள், கொடிய வேலாயுதம் பிளப்பதுபோல் பிளந்ததனால், அவன் அச்சங்கொண்டு விரைந்தெழுந்து, சோமவாரவிரதத்தில் சிறந்த சீமந்தனியின் அற்புதச் செய்கையைப் புகழ்ந்து அவளுக்கு வணக்கம்புரிந்து, அங்கே வந்திருந்த முனிவர்களை நோக்கி, "முனிசிரேஷ்டர்களே! நான் சிவபக்தர்களின் மகிமையை உணராமல் செய்யத்தகாத செய்கையைச் செய்து தீமையைத் தேடிக்கொண்டேன்; திரிநேத்திரங்களை யுடைய பரமசிவனைத் துதிசெய்கின்ற சீமந்தனி, தன் மனத்தில் பாவித்தபடி இந்தப் பிராமணன் மகன் பெண்ணுருவை அடைந்து விட்டான்; அதனால் இந்த வேதியன் மிகுந்த துன்பத்திற்குள்ளாகி யிருக்கிறான்! எனக்கோ உலக நிந்தை சம்பவித்திருக்கின்றது; இந்தப் பிராமணச் சிறுவனுடைய பெண்ணுருவத்தை யொழித்து, என்னுடையபாவத்தை நீக்கிக்கொள்வதற்கு என்னமார்க்கஞ் செய்யலாம்?" என்று வினவினான்.

அப்போது அங்கு வந்திருந்தவர்களில் பாரத்துவாச முனிவர், அவனை நோக்கி, "மன்னனே! உமாமகேசருடைவ உபய திருவடிகளும் சித்தத்திற் பொருந்தும்படி அவரைத் துதிசெய்கின்ற புண்ணியாத்மாக்களுடைய விரதத்தின் மகிமையை, பிரமன் முதலிய தேவர்களாலும் அளவிட்டுச் சொல்லுதல் அரிதாகும்; அத்தகைய உன்னதம் பொருந்திய சிவ விரதத்தைச் சீமந்தனி அனுஷ்டித்து வந்ததால், தான் நினைத்தபடி எதையும் மாற்றிவிடும் சத்தியைப் பெற்றிருக்கிறாள். நீ அதன் மகிமையை உணராததால் இவ்வாறு அவள் விஷயத்தில் அபசாரப்பட்டுத் துயரத்திற்குள்ளாயினை; இனி நீ உமாதேவியாரைப் பூஜித்தே உன்

பாவத்தைப் போக்கிக் கொள்ள வேண்டும்; எத்தகைய பாவங்களைச் செய்து எவ்வகைத் தீக்கதியை அடைந்தவர்களும், மனோன்மணியான அம்பிகையைப் பூஜிப்பார்களானால் தங்கள் பாவம்நீங்கி நற்கதி அடைவார்கள். சூரியன் தோன்றியவுடன் கரிய இருளானது எப்படி நீங்கி விடுமோ அப்படியே, பதினான்கு உலகங்களையும் ஈன்ற பார்வதிதேவியாரின் அருட்பிரகாசந் தோன்றியமாத்திரத்தில் பாவ இருளானது பற்றற ஒழிந்துபோகும்; இதற்கு வேதம் சாக்ஷியாயிருக்கின்றது. ஆதலால், நீ பரிசுத்த மனமுடையவனாய், உமாதேவியாரைச் சிந்தித்துப் பாதிராத்திரியில் சக்தி மந்திரத்தை உச்சரித்துப் பலவிதமாகப் பூஜித்து வந்தால், அம்மை பிரசன்னமாகி இந்த வேதியர்களுடைய துயரத்தையும், உன் துன்பத்தையும் போக்கியருளுவாள்'' என்று உமாதேவியாரின் மந்திரத்தை அவனுக்கு உபதேசித்து, நாடோறும் பார்வதிதேவியாரின் ஆலயத்திற் போயிருந்து தேவி பூஜையை நிறைவேற்றி வரும்படி கட்டளையிட்டார்.

அக்கட்டளையைப் பெற்றவுடன் அரசன், பார்வதிதேவியாரின் ஆலயத்திற் சென்று ஐம் பொறிகளையும் அடக்கி, மனத்தைப் பரிசுத்த நிலையில் வைத்து, அம்மையாருக்கு அடிமைத்திரம் பூண்டு, அவளுடைய பூஜையை யாதொரு குறைவுமில்லாமல் கிரமப்படி செய்து மந்திரத்தை உச்சரித்து வந்தான். இவ்வாறு மூன்று நாட்கள் செய்யவே மூன்று நாளிரவில், பார்வதி தேவியார் அவ்வரசனுடைய பூஜைக்குத் திருவுள்ள மகிழ்ந்து, அவனுக்கு வரங் கொடுத்தற்குப் பிரகாசம் விளங்கும் திருமேனியோடு பிரசன்னமானாள். தேவியாரின் தரிசனங்காணவே அரசன், நான் துயரம் நீங்கப்பெற்று ஆனந்த சாகரத்தில் மூழ்கினேன்' என்று மிக்க மகிழ்ச்சியடைந்து, அவள்முன் கைகூப்பி நின்று, "உலகமாதாவே! இடபவாகனருடைய இடப்பாகத்தைவிரும்பிய ஏந்திழையே! அடியார்க்குவேண்டுவன நல்கும் சிந்தாமணிபோன்றவளே! எளியேனுடைய இடரைத் தீர்த்தருளவேண்டும்'' என்று துதி செய்தான். அப்போது பார்வதி அவனை நோக்கி, "அன்புடன் என்னைத்

துதி செய்கின்ற அரசனே! இனி நீ அஞ்சவேண்டாம்; உன் பூஜைக்கு நான் மகிழ்ந்தேன்; உனக்கு விருப்பமான வரத்தை நீ என்னிடம் கேட்டுக்கொள்'' என்று சொன்னாள். உடனே அரசன், அவளுடைய பாதங்களில் வீழ்ந்து நமஸ்கரித்து, "தாயே! சீமந்தனியால் பெண்ணான பிராமணச் சிறுவன், அப் பெண்ணுருவம் நீங்கி மீண்டும் ஆண் வடிவத்தை யடையும்படி வரந்தர வேண்டும்'' என்றான். அதற்குப் பார்வதி, " மன்னனே! என்மீது உண்மைப் பக்தியுடைய அன்பர்கள் எதை நினைத்தாலும் அது நடந்தே தீரும்; அதனை மாற்றுதற்கு எவரேனும் பிரயத்தனப்பட்டு ஒரு கோடி வருஷம் தவஞ் செய்தாலும் அவ்வாறு விலக்குதல் இயலாது; என் இறைவஃராலும் அது முடியாது, என்னாலுமாகாது; ஆதலால், சீமந்தனியின் மனோ பாவனையால் நடந்ததை விலக்க நினைப்பது பயனற்ற காரியமாகும்; நீ அதனை விடுத்து வேறெந்த வரத்தைக் கேட்டாலும் நான் தருகின்றேன்'' என்று சொன்னாள். அதன்மேல், அம் மன்னன், 'உண்மையான தெய்வ பக்தர்களுக்கு இவ்வளவு மகிமையா ஏற்பட்டிருக்கின்றது!' என்று அதிசயித்து, மீண்டும் அம்மையை நோக்கி, " ஈசுவரி! தன் புத்திரன் பெண்ணானதைப்பற்றி வருந்தும் பிராமணன், தான் நற்கதியடைதற்குப் புத்திரனில்லையே என்று மனங்கலங்கி என்னைப் பலவாறு சபிக்கின்றான்; ஆதலின், அவனுடைய புத்திரனின் பெண் தன்மையை நீக்காவிடினும் அவனுக்கு வேறொரு நற்புதல்வனையாவது அளிக்கவேண்டும்; மேலும், சீமந்தனியின் பாவனையால் ஏற்பட்ட சாமவதி யென்னும் பெண்ணிற்குச் செய்ய வேண்டிய கடமைகளையும் தெரிவிக்கவேண்டும்'' என்று கேட்டுக்கொண்டான். பார்வதி தேவி, "நீ அந்தப் பிராமணர்களையும் இங்கே வரவழை; எல்லோருக்கும் முன்னிலையில் நீ கேட்ட வரங்களைத் தருகின்றேன்'' என்றாள். அரசன் அப்பொழுதே அவ்வேதியர்களையும் அங்கே வரவழைத்தான். எல்லோரும் அம்மையாரின் சேவடிகளில் சாஷ்டாங்கமாக வீழ்ந்து சேவித்தெழுந்து கைகளைச் சிரமேற் கூப்பி நின்றார்கள். அப்போது பார்வதி தேவியார் எல்லோரையும் கடாக்ஷித்து ஆசீர்வ

தித்து, "சுமேதாவையும், பெண் வேடந்தரித்த சாமவானை யும் தம்பதிகளென்று சீமந்தனி பாவித்தபடியால் அவர் கள் அப்படியே உலகத்தில் விளங்கவேண்டும் ; அவர் களால் சோமவார விரதத்தின் மகிமை இன்னதெனப் புலப் படும்; ஆதலால், நீங்கள் ஒரே மனதுடன் சுமேதாவுக்கும், சாமவதிக்கும் விவாகம் செய்வித்து விடுங்கள் ; புத்திரனை யிழந்த சார்ச்சுதனுக்கு வேறொரு நற்புத்திரன் பிறப்பான்; இவ்வரசனுடைய வழி பாட்டிற் கிரங்கி நான் இந்த வரத் தைக் கொடுத்தேன்; நீங்கள் எல்லோரும் சுகமாகவாழ்ந்து முடிவில் என்னுடைய திருவடி நிழலை அடைவீர்கள்" என்று வரங் கொடுத்துத் திருக்கோவிலுக் கெழுந்தருளி னாள்.

அதன்மேல், முன்னே அரசனை நிந்தித்துக் கொண் டிருந்த பிராமணர்கள் மகிழ்ச்சி யடைந்து அவனை நோக்கி, "மன்னனே ! நீ முதலிற் செய்த காரியம் தீமையுடையதா யிருந்தாலும், பின்னர் நீ செய்த தீவத்தால் நன்மையா கவே முடிந்தது; உன்னால் நாங்கள், எவ்வகைத் தவத்தி னாலும் காணமுடியாத பார்வதி தேவியாரையும் தரிசிக்கப் பெற்றோம்," என்று புகழ்ந்தார்கள். பின்னர், அம்மன் னன், சுமேதாவுக்கும், சாமவதிக்கும் மணஞ்செய்வித்து, அவர்களையும், அவர்களின் தாய் தந்தையரையும் அழை துக் கொண்டு நிடததேசம் சென்று, சீமந்தனியையும் ராங்கதனையும் கண்டு, சீமந்தனியின் சோமவார விர மையால், தனக்கும் அந்தப் பிராமணருக்கும் நேர் களை யெல்லாம் அவர்களிடம் கூறினான். அவர்கள், பெற்ற ஞான சொரூபராகிய பரமசிவனுடைய திருவ யும், சகல வுயிர்களையும் பாதுகாத்தருளும் பார்வதி யாருடைய பங்கயப் பதங்களையும் துதிசெய்யும் அ களுக்குக் கிடைக்காத பொருள்களும் உண்டோ ! களின் திருவருளால் நாங்கள் அடைந்த நற்பேறுக பலவாம்" என்று உமாமகேசுரரைப் புகழ்ந்து டாடி, அரசனையும் மற்றவர்களையும் நோக்கி, "நீங்க வரியின் அருளால் என்றும் சுகம் பெற்று வாழ்வீர்

என்று வாழ்த்தி உபசரித்துப் பிராமணர்களுக்கு மேலும் வேண்டிய திரவியங்களைக் கொடுத்தார்கள். அதன்மேல் அரசனும், அந்தப் பிராமணர்களும் சீமந்தனியிடத்தும் சந்திராங்கத னிடத்தும் விடைபெற்றுத் தங்கள் தங்கள் இருப்பிடஞ் சேர்ந்தார்கள்.

வைதர்ப்ப நாட்டரசன் தன் மனைவியுடன் உமாமகேசுரரை வழிபட்டு இல்லறம் நடத்திச் சோமவார விரதத்தை அனுஷ்டித்து நற்கதியடைந்தான். சார்ச்சுதனும், அவன் மனைவியும் பார்வதி வரமளித்தபடி புத்திமானாகிய புத்திரனைப் பெற்று மகிழ்ந்து சோமவார விரதத்துடன் இல்லறம் நடத்தி முடிவில் சிவலோக பதவி யடைந்தார்கள். சுமேதாவும், அவன் தாய் தந்தையரும், மனைவியாகிய சாமவதியும் அவ்வாறே சோமவார விரதத்தின் மகிமையை உணர்ந்து அதனை நிறைவேற்றிச் சிவபெருமானுக்கும் பார்வதி தேவியாருக்கும் வழிபாடு செய்து அவர்களுடைய திருவடி நீழலை அடைந்தார்கள். இவர்களால் சோமவார விரதத்தின் மகிமை எங்கும் பரவிற்று. அதனால் அவ் விரதத்தை உலகத்தாரெல்லோரும் அனுஷ்டிக்கத் தலைப்பட்டார்கள். சீமந்தனியும், சந்திராங்கதனும், தாங்கள் பெற்ற எட்டுப் புத்திரர்களுடனும், ஒரு புத்திரியுடனும், மேன்மேலும் வளர்ந்தோங்கும் ஐசுவரியத்துடனும், மிக்க புகழை. .னும், உமா மகேசுரருக்கு வழிபாடு செய்து கொண்டு தீ வர்களாய், நெடுங்காலம் அரசுசெலுத்தி யிருந்தார் ெரு சோமவார விரதம் அனுஷ்டித்து, இப் புண்ணிய ங்க யைப் பாராயணஞ் செய்து வருவோர்க்கு இம்மையிற் முேம், சுகமும், புகழும், ஆயுள் விருத்தியு முண்டாம். ,மயில் உயர்ந்த பதவியும் கிடைக்கும். கார்த்திகை ் சோமவாரங்களில் விரதம் பூண்டு இக்கதையைப் ார்க்கு இன்னும் விசேஷ பலனுண்டாகும்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

சீமந்தனி முற்றுப்பெற்றது 93; 23

---

PRINTED AT THE "ANANDA BODHINI" PRESS, MADRAS.